உ

கடவுடுணை.

# முகவுரை.

மாட்சிமைதங்கிய எனதன்பர்களுக்குப் பெரும்பாலும் வந்தனம் அன்போடுதந்தனம்.

ஐயாபுத்திமான்களே !

கடல்சூழ்ந்த நெடியவுலகமெங்கும் புகழ்பெற்றோங்கிப் பெருமைவாய்ந்த நந்தியெம்பெருமான், கும்பமுனி, திருமூலதேவர், சட்டநாதர், காலாங்கிநாதர், போகமுனி, இடைக்காடர், ஜண்டிகேசர், ரோமரிஷி, கருவூரார், புண்ணாக்கீசர், மச்சமுனி, புலிப்பாணி, யூகிமுனி, கொங்கணர், வரரிஷி, தேரையர், தன்வந்திரிமுதலிய பதினெண்சித்தர்களும் திருவாய்மலர்ந்தருளிய மூன்றிலட்சங் கிரந்தங்களில் அடியேனுக்குக் கிடைத்தசிலசெய்யுட்களை என்னாற்கூடியளவு மொழிபெயர்த்து சுருதி, யுக்தி, அநுபவம் இம்மூன்றுக்கு மொவ்வுதலானவைகளைமாத்திரமொன்றாய்த்திரட்டிப் பண்டிதாளிலக்கணமும், ரோகிகளிலக்கணமும், வியாதியஸ்தர்களை கைப்பிடித்துப்பார்க்குமளவும், நாடிகள்நடைகளும், நாடிகள்நடைகளுக்கேற்ற வியாதிக்குறிப்புகளும், மரணநாடிநடைகளும், குருநாடிநடைகளும், பூதநாடிவகைகளும், பூதநாடியின் நடைகளுக்கேற்ற செய்கைக்குறிப்புகளும், நாடிகளின் தொகுப்புகளும், வியாதிகளின் தொகுப்புகளும்-சுசுசுஅ-வியாதிகளின்பெயர்களும், வியாதிகள் வந்தவரலாறும், கன்மமும், ஒவ்வொருவியாதியின் உற்பத்தியும், அந்தந்தவியாதியின் தொகுப்புகளும், ஒவ்வொருவியாதிக்குமும்மூன்றுஅவுஷதங்களும், வேறுபொது அவுஷதங்களும், ஒவ்வொருவியாதிக்குத் தனித்தனிஅவுஷதங்களும், அவுஷதங்களைச் சுத்திசெய்யும்விதமும், பஞ்சபூதசரக்குகளும், சத்துருமித்துருசரக்குகளும், உப்புபுளிசரக்குகளும், நாதவிந்து சரக்குகளும், பஞ்சலோகசுத்திகளும், அட்டலோகமாரணவகைகளும், கட்டுவகைகளின் பரீட்சைகளும், வியாதியஸ்தர்களுக்குத்தக்க அநுபானங்களும், மருந்துகளைக்கொடுக்குங் காலஅளவும், பத்தியபாகங்களும், பாஷாணவகைகளுக்கு முறிவுகளும் அந்தந்ததேகங்களுக்குத்தக்க அவுஷதப்பிரயோகங்களும், அந்தந்ததேகிகளினிலக்கணங்களும், சிசுவாகடமும், அடங்கிய இராஜவயித்திய போதினியென்னுமியற்பெயரமைந்து மூன்றுபாகங்களாக இயற்றத்துணிந்தமையால், இம்முதற்பாகத்தில் சொற்குற்றம், வசனகாவிய நடைக்குற்றம் இயாதேனுமிருந்திடில் பெரும்பாலும் அடியேனை அங்கீகரிப்பீர்களெனக் கோருகின்றனன்.

அன்றி யானியற்றிய இராஜவயித்தியபோதினியின் முதற்பாகத்தை ம-ள-ள-ஸ்ரீ, பிடாரித்தாங்கல் நாராயணசாமிமுதலியாரவர்கள் குமாரரும், சிரோன்மணிவிலாச அச்சுக்கூடத் தலைவருமாகிய சிதம்பர முதலியாரவர்கள் சகலசுதந்தரத்துடன் தாமேபெற்றுக்கொண்டு வேறொருவர் அச்சிடாதபடிக்கு ரிஜிட்டர்காப்பிரயிட்செய்யப்பட்டது.

தற்காலம் இராஜவயித்தியபோதினி இரண்டாம்பாகமும், சப்தரிஷிவாக்கியமும், போகர்மாந்திரீகம் அட்டமாசித்து இருநூறும், பூதானந்தர் சொரூபஞானம்முந்நூறும், தன்வந்திரிஞானம் ஐந்நூறும், தேரையர் வயித்தியசுருக்கம் ஐம்பதும், தேரையர் வாதச்சுருக்கம் நூறும் அச்சிட்டுக்கொண்டுவருகிறோம்.

இப்படிக்கு
முச்சங்கப்புலவர்
களத்தூர் - வேதகிரிமுதலியார்
பௌத்திரன்
**அங்கமுத்துமுதலியார்.**
நேட்டிவ்டாக்ட்டர்,
மதிராஸ்

# விளம்பரம்.

ஐயா!

இந்த இராஜவயித்தியபோதினியென்னும் புத்தகம் வேண்டுபவர்கள் சென்னை-பெரம்பூரைச்சார்ந்தகுசப்பேட்டை-௬௪-௯௫-நெ-வீட்டில் வசிக்கும் சிரோன்மணிவிலாச அச்சுக்கூடத்தலைவர் ம-ள-ள-ஸ்ரீ சிதம்பரமுதலியாரவர்களிடம் பெற்றுக்கொள்ளலாம்.

இதன் விலை ரூபா-0-12-0

| | | | |
|---|---|---|---|
| கிருஷ்ணலீலாவிநோதக்குளிகை என்னும் தாதுவிர்த்திலேகியம் | டப்பி-1-க்கு | விலை-ரூபா | 2-0-0 |
| சகலமேகநாதிமெழுகு ... | ,, 1-க்கு | ,, | 0-8-0 |
| பற்பொடி ... | ,, 1-க்கு | ,, | 0-4-0 |
| கொருக்குபுண்களுக்குமுலாம் | ,, 1-க்கு | ,, | 0-4-0 |
| சத்திமாத்திரை ... | 1-க்கு | ,, | 0-2-0 |
| யூநாநிபேதிமாத்திரை ... | 1-க்கு | ,, | 0-1-0 |
| குடல்வாதஎண்ணெ | ஆழாக்கு-1-க்கு | ,, | 1-0-0 |

ஆகமருந்துகளும், ஷர்பத்துவகைகளும், இந்நூலியற்றியவரால் மிகவநுபவமாய் செய்யப்பட்டு மேற்கூறிய அச்சுக்கூடத்தலைவரிடம் விற்பனையாய்வருகிறது.

உ

கடவுட்டுணை.

# அட்டவணை.

அன்றி யானியற்றிய இராஜவயித்தியபோதினியின் முதற்பாகத்தை ம-ா-ா-ஸ்ரீ, பிடாரித்தாங்கல் நாராயணசாமிமுதலியாரவர்கள் குமாரரும், சிரோன்மணிவிலாச அச்சுக்கூடத் தலைவருமாகிய சிதம்பர முதலியாரவர்கள் சகலசுதந்தரத்துடன் தாமேபெற்றுக்கொண்டு வேறொருவர் அச்சிடாதபடிக்கு ரிஜிட்டர்காப்பிரயிட்செய்யப்பட்டது.

தற்காலம் இராஜவயித்தியபோதினி இரண்டாம்பாகமும், சப்தரிஷிவாக்கியமும், போகர்மாந்திரீகம் அட்டமாசித்து இருநூறும், பூதானந்தர் சொரூபஞானம்முந்நூறும் தன்வந்திரிஞானம் ஐநூறும், தேரையர் வயித்தியசுருக்கம் ஐம்பதும், தேரையர் வாதச்சுருக்கம் நூறும் அச்சிட்டுக்கொண்டுவருகிறோம்.

இப்படிக்கு
முச்சங்கப்புலவர்
களத்தூர் - வேதகிரிமுதலியார்
பௌத்திரன்
**அங்கமுத்துமுதலியார்.**
நேட்டிவ்டாக்ட்டர்,
மதிராஸ்.

# விளம்பரம்.

ஐயா!

இந்த இராஜவயித்தியபோதினியென்னும் புத்தகம் வேண்டுபவர்கள் சென்னை-பெரம்பூரைச்சார்ந்தகுசப்பேட்டை-௬௪-௬௫-நெ-வீட்டில் வசிக்கும் சிரோன்மணிவிலாச அச்சுக்கூடத்தலைவர் ம-ா-ா-ஸ்ரீ சிதம்பரமுதலியாரவர்களிடம் பெற்றுக்கொள்ளலாம்.

இதன் விலை ரூபா-0-12-0

| | | | | |
|---|---|---|---|---|
| கிருஷ்ணலீலாவிநோதக்குளிகை என்னும் தாதுவிர்த்திலேகியம் | டப்பி | -1-க்கு | விலை-ரூபா | -2-0-0 |
| சகலமேகாதிமெழுகு ... | ,, | 1-க்கு | ,, | 0-8-0 |
| பற்பொடி ... | ,, | 1-க்கு | ,, | 0-4-0 |
| கொருக்குபுண்களுக்குமுலாம் | ,, | 1-க்கு | ,, | 0-4-0 |
| சத்திமாத்திரை ... | | 1-க்கு | ,, | 0-2-0 |
| பூராகிபேதிமாத்திரை ... | | 1-க்கு | ,, | 0-1-0 |
| குடல்வாதஎண்ணெ | ஆழாக்கு | -1-க்கு | ,, | 1-0-0 |

ஆகமருந்துகளும், ஷர்பத்துவகைகளும், இந்நூலியற்றியவரால் மிகவநுபவமாய் செய்யப்பட்டு மேற்கூறிய அச்சுக்கூடத்தலைவரிடம் விற்பனையாய்வருகிறது.

கடவுள்துணை.

# அட்டவணை.

# அட்டவணை.

அட்டவணை - முற்றிற்று.



உ

கடவுடுணை.

மகாமகுத்துவப்பொருந்திய

# பதினெண்சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# இராஜவயித்திய போதினி.

## காப்பு.

ஓமென்னும் பிரணவத்தி னருளே காப்பு
ஒளிபெருகு மௌனதாயாள் பாதங் காப்பு
ஆமென்னு மயிலுடையோ னடியே காப்பு
அரகரா நூலொன்றுய்த் திரட்டி கூற
ஊமென்னும் பொருளதனின் ரகசி யத்தை
யுற்றுணர்ந்த பெரியோராஞ் சின்மயத் தோர்
தாமென்னுஞ் செறுக்கற்ற பதினெண் சித்தர்
தாளடிக்கு யென்னாளுங் காப்பு தானே.

## அவையடக்கம்.

என்னாளுங் கற்றோர்முன் பேச வல்லேன்
யெழில்பெருகும் பாவினங்கள் கூற வல்லேன்
பொன்மேனிப் பதினெண்பேர் செய்த நூலில்
புகன்றிருக்கும் ரகசியத்திற் சிலதி யற்ற
உன்னினேன் வசனகா வியம தாக
வுரைத்தவிந்நூற் றனிற்குற்ற மிருக்கு மாயின்
தன்னியராம் பெரியோர்நூ லென மதித்து
சங்கைகளைத் தெரிந்துகொள்வீர் போற்றி தானே.

## பண்டிதரிலக்கணம்.

நாடோறும் சிவபூஜைபண்ணுதல், பொய்சொல்லாமை, சற்சனசகவாசம், பரங்களுக்கமுதளித்தல், பரதாரம்விரும்பாமை, தனக்குமேலாகிய பண்டிதரையோசித்தல், சரக்குகளை நன்றாய்ச் சுத்திசெய்யத்தெரிந்துகொள்ளல், ரோயாளியின் தேகக்குறிப்பறிதல், அந்தந்ததேகங்களுக்குரிய அவுஷதங்களின்திடமறிந்து பிரயோகித்தல், கைப்பரிக்ஷை, நயனப்பரிக்ஷை, மெய்ப்பரிக்ஷை, சப்தபரிக்ஷை, நாடிப்பரிக்ஷை, நாப்பரிக்ஷை, ஜலப்பரிக்ஷை, மலப்பரிக்ஷை முதலிய அஷ்டவிதப்பரிக்ஷைகளை நன்கறிதல், கைபாகம், உருசிபாகம், செய்பாகம், சாசனபாகமென்னும் நான்குபாகங்களையும், வழிபாடு, தேவபாடு, முறைபாடு, குணபாடு ஆகிய நான்குபாடுகளையும், ஸ்நானபரிகாரம், நித்திரைபரிகாரம், சையோகபரிகாரம், போசனபரிகாரம் என்னுமிந்நான்குபரிகாரங்களையுங் கண்டறிதல், ரோகஸ்திரீகளை தங்கை தமக்கைகளெனப் பாவித்தல், அதிக ஆசையின்றி வியாதிகளுக்குத்தக்க அவுஷதச்செலவும், தனது ஜீவனத்துக்குப் போதுமானபொருளைப் பெற்றுக்கொள்ளல், தொந்தரோகங்களைத் தெரிந்துசொள்ளல், வியாதியஸ்தர்களுக்கு மருந்தூணு முறைதெனக்கண்டறிதல், சாத்தியமசாத்தியம் வகுத்துரைத்தல், அவுஷதம் பிரயோகிக்குங்கால் ஆசானைத்தியானித்தல், ரோகஸ்தர்கள் வயித்தியரையழைக்கும்போது இவ்வியாதிநீங்கும் நீங்காதென்றுணர்ந்துரைத்தல், சோதிடம், அதர்வண முதலிய சாத்திரங்களைக் கற்றுணர்தலாகிய வித்தகையகுணங்கள்வாய்த்தவர்கள் சிறந்தபண்டிதர்களாவார்களெனப் பதினெண்சித்தர்களும், நவகோடி ரிஷிகளும், நாற்பத்தெண்பேர் முனிவர்களும், திருவாய்மலர்ந்தருளிய பற்பலநூல்களிலிருந்தெடுத்துச்சுருக்கமாயெழுதலாயினோம்.

## ரோகிகளிலக்கணம்.

தெய்வீகத்தன்மைவாய்ந்த பண்டிதரின்திருவாசல்காத்து உள்ளன்போடு ஆசானுபாகுவாயழைத்தல், வேண்டிய சைத்தியோபசாரஞ்செய்து மனங்களிப்பித்தல், பயபக்திவிசுவாசத்தோடு கைகாட்டல், பண்டிதர் மனம்நோகாமல்தன்னாற்கூடியபொருளுதவிசெய்தல், அவர் திருவடியில் முடிதாழ்ந்து அவுஷதம்பெற்றுண்ணல், அவர்களுக்குத் தாம்பூலம் பரிசளித்தலாகிய வித்தகையகுணங்கள்வாய்த்தரோகிகளுக்கு மருந்தூணும், மற்றவர்களுக் கூறுதெனப் பதினெண்பேர்கள் விரிவாய்ச்சொல்லியதை இங்ஙனஞ் சுருக்கமாய்க் கூறலாயினோம்.

## வயித்தியர்களை அழைக்கும் திக்கு.

இந்திரன்திக்கில் நின்றழைக்கவேண்டும். அன்றி, அக்கினிதிசையில் நின்றழைத்தால் உடனேமரணம், இயமன்திக்கில் நோய் நீங்காமை சின்னாளிருந்துபோவன், நிருதியில் கலக்கச்சாவு, வருணதிசையில் அநுகூலமிருது, வாயுவில் மத்திபம், ஈசானியம், குபேரதிசையில் நின்றழைக்கில் வெகுசுலபமாய் வியாதிநீங்கி சுகமடைவரென்றறிக.

## பண்டிதர்கள் உடுபாவனை.

சிவப்பு மஞ்சள் கறுசிறப்புள்ளி காவி முதலிய பற்பலநிறமுள்ள ஆடைகளைநீக்கி வெண்மைபொருந்திய ஆடைகளை உடுத்தி பரிமளமணிந்து பண்டிதஞ்செய்யவேண்டுமென்றறிக.

## பண்டிதர்கள் போஜனவிதியறிய.

தத்தமது கைகளினால் முப்பத்திரண்டு கவாளமுள்ளபோஜனத்தை பற்களானன்றுமறப்புசிக்கவும், அப்படியூன்றினல் கிராணிவந்தெய்துமென்றறிக, அன்றி அறுசுவைகளையுஞ் சமப்படுத்திப்புசிக்கவும்.

## தண்ணீர் அளவு.

அவ்வவர்கள் உண்டபின் எட்டுமுணர்ஜலம் புசிக்கவேண்டுமென்றறியவும்.

## தாம்பூலவிதியறிய.

வெள்ளிலை, பாக்கு, சுண்ணம் இவைமூன்றுமொன்றுகூடில் விஷமாகும், ஆகையால் முதல்கூட்டுமெச்சிலை உமிழவும், இரண்டாவதுகூட்டுமெச்சில் பித்தமாகையால் அதையுந்துப்பி மூன்றுவது எச்சில் உட்கொண்டால் தேவாமுதத்திற்கொப்பாகுமன்றி கபரோகமுதலியதையும் போக்குமென்றறிக.

## சையோகவிதியறிய.

உண்டுதாம்பூலந்தரித்துக் கலவைச்சாந்தணிந்து இரவில் ஒரு சாமத்திற்குமேல் லீலைபுரிந்தால், தேகவீனம்வாராது, அன்றியும்மாதத்திற்கிரண்டுவிசை நடாத்தவேண்டுமென்றறிக.

## ஸ்நாநவிதியறிய.

மையலாரிட மணைந்தெழுந்தவுடன் ஸ்நாநம், சவர முதலியதுஞ்செய்துக்கொள்வதால் தேகங்கெட்டு சன்னிபாதம்வந்தெய்துமாகையால் அக்காலஞ் சையோகம்நீக்கவேண்டுமென்றறிக.

வயித்தியர் புறப்படுங்கால் ஆகாச்சகுனவிதியறிய.

ஒத்தைப்பிராமணன், மொட்டை, தலைவிரித்தான், சன்னியாசி, தட்டான், செட்டி, நெருப்பு, கத்தி, இரும்பு, அழுகைக்குரல், விறகு, தும்பல், பூனை, சாரை, சர்ப்பம், ஓரி, நாற்காலி, பஞ்சணை, சாணான், சக்கிலி, குயவன், எண்ணெவாணியன், கைம்பெண்முதலியவை நேரிடில் துற்சகுனமென்றறிக.

நற்சகுனவிதி.

சுமங்கலி, வளையற்காரன், வேதகோஷ்டம், பரிமளம், வாத்தியம், சங்கீதசாரம், தாம்பூலம், காட்டானை, இராஜாளி, குரங்கு, அரசன், கண்ணாடி, பித்தன், தயிர், பால், நெய்க்குடம், சாணமுதலியதுமெதிரிடில் நற்சகுனமென்றறிக.

## நான்முகம்.

நாடிகளின் விவரம்.

எழுபத்தீராயிரநாடிகளை இடை, பிங்கலை, சுழினை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புகுடன், குருவன், சங்கினியென்னும் தசநாடிகளாக்கியும், அதற்குற்ற பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயனாகிய தசவாய்வுகளாகவும், அதைச்சுருக்கி சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணமென்னும் பஞ்சநாடிகளாக்கியும், அதற்குற்ற பிரிதிவு, அப்பு, வாய்வு, தேய்வு, ஆகாயமாகிய பஞ்சபூதங்களாகக்கூறியுங் காணவரிதெனத் தெளிவாய்ச்சுருக்கி பிரம்மா, விஷ்ணு, ருத்திரனென்னும் திரிமூர்த்திசொரூபமாயும், அகார, உகார, மகார வாத்மகமாகவிளங்கும், வாதம், பித்தம், சிலேற்பனநாடிகள்மூன்றுக்கி எடுத்துக்காட்டினர் அகஸ்தியர்முதலிய பெரியோர்களென்றறிக.

நாடிகளின் தொகைகள்.

சிரசில்-௭௲-நாடிகளும், இரண்டுசெவிகளில்-௩௱௰-நாடிகளும், விழிகளிரண்டில்-௪௲-நாடிகளும், மூக்கில்-௩௩௩௰-நாடிகளும், இரண்டுகன்னங்களில்-௫௲-நாடிகளும், தோள்களில்-௲-நாடிகளும், கண்டத்தானத்தில்-௲-நாடிகளும், இரண்டுகைகளில்-௩௲-நாடிகளும், தொண்டை தொப்பூழில்-௯௱௰௯-நாடிகளும், பிடரியின்கீழ்-௮௲-நாடிகளும் விலாவில்-௩௲-நாடிகளும், லிங்கம் யோனி அடிவயிற்றில்-௭௲-நாடி

களும், மூலத்தில்-ந-து-நாடிகளும், இடைசந்தில்-உது-நாடிகளும், பாதங்களில்-தூர-நாடிகளும் ஆகிய எழுபது-நாடிகளும் பாதாதிகேசபரியந்தம் வியாபித்திருக்குமென்றறியவும்.

நாடிபார்க்கும் வகை.

வலதுகையை மெட்டைவாங்கி பெருவிரலின்கீழ் ஒருவிரல் அங்குலந்தள்ளி பண்டிதர் மூன்றுவிரல்களைவைத்து வேறெண்ணமின்றி உற்றுநோக்கில் நாடிகள்மூன்றும் பேசுமென்றறிக.

புருடநாடிகள் நடை.

வாதம்.

ஆள்தூண்டிவிரலில் அன்னம்போலும், சேவற்போலும், மயில்போலும் நடையுளதாயப்பேசுமாம் வாதநாடியென்றறிக.

பித்தம்.

நடுவிரலில் ஆமையைப்போலும், அட்டையைப்போலும் நடையுளதாய்ப்பேசுமாம் பித்தநாடியென்றறிக.

சிலேற்பனம்.

பவுத்திரவிரலில்தவளையைப்போலும்,பாம்பைப்போலும் நடையுளதாய்ப்பேசுமாஞ் சிலேற்பனநாடியென்றறிக.

ஸ்திரீகள் நாடிநடை.

மேற்கூறியதைப்போல் இடதுகையைப்பிடித்து மெட்டைமுதலியதும்வாங்கி உற்றுநோக்கில் அடியிற்சொன்னதைப்போன்று பேசுமென்றறிக.

வாதம்.

ஆள்தூண்டிவிரலில் சர்ப்பத்தைப்போன்று நடையுளதாய்ப்பேசுமாம் வாதநாடியென்றறிக.

பித்தம்.

நடுவிரலில் தவளையைப்போன்றுநடையுளதாய்ப்பேசுமாம் பித்தநாடியென்றறிக.

சிலேற்பனம்.

பவுத்திரவிரலில் அன்னத்தைப்போன்று நடையுளதாய்ப் பேசுமாஞ் சிலேற்பனநாடியென்றறிக.

மூன்றுநாடிகளிருப்பிடம்.

வாதம் மலத்திலும், பித்தம் ஜலத்திலும், ஐயம் விந்துவிலு மிருக்குமிடமென்றறிக.

ஸ்ரீ நாடிகளினிறம்.

கறுமையும், செம்மையுமாயிருக்கும் வாதம், பச்சை பசுமையாம் பித்தம், வெண்ணிறமுள்ளது ஐயமென்றறிக.

{ நாளொன்றுக்கு மூன்றுநாடிகள் பேசும் நாழிகை அளவு. }

உதயத்தில் பத்துநாழிகை வாதம்பேசும், மத்தியானத்தில் பத்துநாழிகை பித்தம்பேசும், மாலை பத்துநாழிகை ஐயம்பேசுமென்றறிக.

திரிநாடிகளின் குறிப்பு.

உந்தியில் வாதமும், கண்டத்தானத்தில் பித்தமும், இதயத்தின்மேல் சிலேற்பனமுமிருக்குமாம்.

நாடிகள் நடக்குங்காலம்.

திங்கள் புதன் வெள்ளியில் வாதநடையாம், வியாழத்தில் ஐயநடையாம், செவ்வாய் ஞாயிறு சனிவாரங்களில் பித்தநடையாம்.

நாடிகள் பார்க்கும் மாதகாலம்.

வைகாசி சித்திரையில் உதயகாலத்திலும், கார்த்திகை ஐப்பிசி ஆனி ஆடியில் மத்தியானத்திலும், மார்கழி தை மாசியில் மாலைகாலத்திலும், பங்குனி ஆவணி புரட்டாசியில் நடுவிரவிலும், வைத்தியர் கைப்பிடித்துப்பார்க்க மூன்றுநாடிகளுந்தெளிவாய்ப்பேசுமென்றறிக.

நாடிகளின் மாத்திரையளவு.

வாதம்-க-பித்தம்-உ-சிலேற்பனம்-வ-மாத்திரையுள்ள நடைகளாயிருந்திடில் தேகங்களில் ரோகமின்றி சுகமாயிருக்கும் சற்றுமாத்திரைகள் பிசகினின்றால் வியாதிகளுண்டாமென்றறிக.

பஞ்சநாடிகள்பார்க்கும்வகை.

பெருவிரலில் குருநாடியும், ஆள்தூண்டியில் வாதமும், நடுவிரலில் பித்தமும், பௌத்திரத்தில் ஐயமும், சிறுவிரலில்பூதமுமாகமருவிநின்றநாடிகளில் வாதத்திற்கும், பித்தத்திற்கும் நடுவில் கத்தரிக்கோன்மாரலைப்போல் கிறுகிறுப்புடன் தமரகம்போலாடிநிற்கும், அன்றியும்என்னுளும்மேற்கூறியஎழுபத்திராயிரம் நரம்புகளினும்புகுந்துலாவிக்கொண்டிருக்கும் காணுதற்கரிய குருநாடியானது வாதத்தில் நிற்கும்போது கோழிஅன்னம்போலும், பித்தத்திலுலவும்போது ஆமை அட்டைபோலும், ஐயத்திலுறையும்போது விட்டிலைப்போலும் விளங்கும் மகாபெருமைவாய்ந்த குருநாடியாம், அதைக்கண்ட புண்

ணியசீலராகிய பண்டிதர்-சுசாசுஅ-வியாதிகளின் தொகுப்புகளெல்லாமுரைப்பார்களெனப் பதினெண்பேர்க ளறைந்தனரென்றறிக.

## குருநாடியின் செய்கைக்குறிப்பு.

குருநாடியானது வாதத்தில் அட்டைபோல ஊரிநிற்கில் வாய்வு மிகுதல், தினவு சொரி, இருமல், தேகவாட்டம் இவைகளைத்தரும், பித்தத்தில் ஆமைபோன்றிருக்கில் சுரம், தலைச்சுழட்டல், வாய்நீரொழுகல், வியர்வுதோன்றல், நீர்க்கட்டல் முதலியகுணங்களை யுண்டாக்கும், சேத்துமத்தில் அரியென்னுஞ்சிங்கம்போன்றுநடக்கில் ஜன்னிபாதமும், மரணக்குறியும் உண்டாக்கும், குன்றிப்போகில் வயிர்கடுப்பம், கைகால்கள்வீக்கமும் உண்டாகும்; பக்கம்பாய்ந்திடில் ஐயம் எதிரில்மோதும், நேர்நிற்கில் வாதபித்தம் இரண்டும் ஒன்றுசேரும், பின்வாங்கில் சாத்தியமுண்டாகும்பெருமைவாய்ந்த குருநாடியாம். குருநாடியையறிந்தபண்டிதர்கள் நோயாளிகளுக்கு அவுஷதங்கள் பிரயோகித்தால் வீண்போகாதென்றறியவும்.

## வாரங்களில் பேதித்துநடிக்கும் நாடிகளின்குணம்.

ஞாயிறில் வாதம்நடக்கில் சளி இருமல் இறைப்புகளும், செவ்வாயில் சுரமும், சனியில் சீதளமும் சன்னியும், வியாழத்தில் தேகவலியுமுண்டாம், திங்களில் பித்தம்நடந்தால் ஜலதோஷமும், புதனில் நீரேற்றமும் தலைக்குத்தும், வெள்ளியிலே கண்ணோயும் காதுநோயும், வியாழத்தில் தாபசுரமும் தலைநோவுமுண்டாமென்றறிக.

## நாடிகளறியப்படாமை.

அதிசையோகத்தோர் யானைகுதிரைகண்மேல் சவாரிசெய்வோர் தேர்மேற்செல்வர், அதிநடையுளோர், அதிபோசனமருந்துவோர், லாகிரியுண்போர், நீரிழிவு, வீக்கம், குட்டம், குறைநோயுள்ளோர், விஷமுண்டோர், ஓட்டமுள்ளோர், எண்ணைத்தலையோர், சுரமாய்கின்றோர், அச்சங்கொண்டோர், வியாகுலமடைந்தோர், மதங்கொண்டோர், பாலியத்திலிளைத்தோர், அதிகசினங்கொண்டோர், விரதமுள்ளோர், நாட்கொண்டநோயோர், கெற்பமுள்ளோர், பெரும்பாடு, சோகை, பாண்டு, மகோதரமுள்ளோர், மாதவிடாயானோராகிய இத்தகையோர் நாடிகளைக்கண்டறியவரிதாகையால் மற்றையசப்தவிதபரீட்சைகளால் கண்டுகொள்க.

## மரணநாடி அறிதல்.

வாதநாடியானது அரவின்நாப்போல அடிக்கடி உதறிவலித்து நின்று பித்தம்பதுங்கிடில் காலன் நெருங்கினனென்றறிக.

ஷை உ - வது.

காலையில் சிலேற்பனநாடியும், மத்தியானத்தில் பித்தமும், மாலையில் வாதமும் முறைப்பிசகிநடந்தால் ஐந்துநாளையில் மரணமாவார்களெனக் கண்டித்துசொல்லவும்.

ஷை ங - வது.

வாதநாடியானது செம்போத்துபோல்புறந்துடித்தால் திங்களொன்றில் திராவிடில் மரணமென்றே நிச்சயித்துசொல்லவும்.

ஷை ச - வது.

ஐயநாடியானது அசுவத்தைப்போல திமிர்ந்துபேசில் ஒருமாதத்தில் வாழ்நாள்முடிந்ததென வச்சமின்றிசொல்லவும்.

ஷை ரு - வது.

சேத்துமநாடியானது மயிலைப்போலசைந்தும், அட்டையைப்போலுறைந்தும், நின்றுதரில் எ-நாளையில் மரணஇசைவந்ததென்றறியவும்.

ஷை சு - வது.

வாதபித்தமையமூன்றும் விட்டிலைப்போல் துடித்துபேசில் விசைசரம்புகுளிர்ந்துகாணும் உடனே நறநறெனப்பற்கடித்தும், நாவுலர்ந்தும், நடுக்கமுற்றும், மூச்சயர்ந்தும், அவன் ஆவிநீங்கும்.

ஷை எ - வது.

ஐயநாடியானது பெருவெள்ளம்போல் வெகுசுறுக்காய்மடமடென்றேகுமாயின் அடுத்தநாள் மரணமாவானென்றறிக.

ஷை அ - வது.

பித்தநாடியானது வகைதப்பிசிதறியோடில் மூன்றுவதுநாள் இறப்பானென்றறியவும்.

ஷை கூ - வது.

வாதநாடியானது வெகுஅதிகாரத்துடனிருக்கும் கொலுவகற்றிசிதறிப்பாயில்-அ-நாளையில் மரணமாவானென்றறிக.

ஷை ௰ - வது.

வாதபித்தமிரண்டுமொன்றுபட்டு ஊடுருவிச் சிதறிப் பாச்சல்காணில்-௰௫-நாளில்மரணம் அத்துடன் ஐயம்பாயில் மண்டலத்தில் மரணம் இவைமூன்றும் ஒருங்குசேர்ந்து அரணைவால்போல துடிகாணில் அசாத்தியமரணமாகுமென்னவும்.

ஷை ௰க - வது.

வாதபித்தமையமூன்றும் சிநேகித்துவிசையாய் கருந்தேள்சொடுக்கைப்போன்றுடிக்கொண்டும், ஓடத்தைப்போலோடியும் காண்பிக்கில் ஒருமாதத்தில் மரணமாவானென்றறியவும்.

ஷை ௰உ - வது.

சன்னிவரும்போது நாடிகள்மூன்றும் சுழல்வண்டு நீரில்சுழலுதல்போலும், பம்பரம்போலும், விட்டிலைப்போலும்ஓடில் மரணமாவானென்றறியவும்.

ஷை ௰௩ - வது.

ஐயநாடியானது மந்தித்துமூன்று புற்றீசலைப்போன்று பதறிநிற்கில் ஒருபகலுக்குள் மரணமாவானென்றறியவும்.

ஷை ௰௪ - வது.

ஐயம் பித்தத்தை அணைத்தெதுத்தேறுமாகில் ஒருதினத்தில் காலன்வந்து அவன் ஆவியைக் கொள்வானென்பது நிச்சயமென்றறியவும்.

ஷை ௰௫ - வது.

ஐயநாடிபாய்ந்து வாதத்தைப்பற்றிநின்றால் ஒரு நாழிகைக்குள் ஏமனூர்பதி சேர்வார்களென்பது நிச்சயம்.

ஷை ௰௬ - வது.

காலையில் மூன்றுநாடிகளும் கதிப்பெடுத்து குரூரமாயும், உச்சியாகியபகலில் பித்தமழுந்தியும், மாலையில் வாதமானது ஐயத்திலுறைந்தும்பேசினால் தடையின்றி-௬-மாதத்தில் இறப்பானென்றறிக.

ஷை ௰௭ - வது.

ஐயத்தில் வாதமும்,பித்தமும் தவளையைப்போன்றுதொங்கியும், அரவத்தைப்போல் புரண்டுநடந்தாலும், மரணம் சமீபித்ததென்றறியவும்.

ஷை ௰௮ - வது.

சேத்துமநாடியானது மயிலைப்போலும், அட்டையைப்போலும் நடந்து நடுங்கிநின்றால்-௭-நாளில் மரணமாவானென்றறியவும்.

ஷை ௰௯ - வது.

வாதம்-௧-பித்தம்-௧-ஐயம்-௺-ஆகப்பேசில் பிணியாளர் கைகளைவிட்டு அப்புறம்புறப்பட்டுப்போவதே பண்டிதர்க்கழகாம்.

௯ உம் - வது.

ஐயம் ௨-வாதம் ௨ பித்தம் ௭ ஆசப்பேசில் பிணியாளர் பக்கல் பண்டிதர் யாதொன்றும் சொல்லாமற்போவது மிகவுத்தமமெனக் கொள்க.

தொடுமரணக்குறி.

பண்டிதரை யழைக்கும்போது திருமுகத்தில்கைவைத்தால்பிணிகள்தீராது, மார்பில் கைவைத்தாலும், கை, கால், தோள்தொட்டாலும் இடுப்பில் கைவைத்தாலும் வியாதிகள் நீங்குமென்றறிக.

பூதநாடி.

பூதநாடியானது துடித்துநிற்கில் வாய்வு அதிகரித்து தேகமுழுதும் குத்தலாயும் ஜன்னிவந்தெய்தும பித்தம்நோக்கிநின்றால்சாகான், ஐயம் சிதறித்தாக்கில் ஆவிநீங்கா.

ஸ்ரீகளுக்கு பைசாசு தொடர்ந்தகுணம்
பூதநாடியா லறியும்விவரம்.

ஸ்ரீகளுக்கு நாடிகள் பார்க்கும்போது ஆள்தூண்டுவிரல், நடுவிரல், பவுத்திரவிரலில்பேசும் திரிநாடியுந்தாண்டிசிறுவிரலில்பேசும் பூதநாடியானது பூனையைப்போல் நடக்குமாயின் சிரல், சிலவேளை பொறுமை, கிள்ளல், புரண்டல், திருடல், புருஷனை அடிக்கடிவெறுத்தல்முதலிய குணத்தையுண்டாக்கும், செவ்வாயில் கழிப்புசெய்தால் தீருமென்றறியவும்.

௨ - வது.

பூதநாடி வெள்ளெலிபோலக் குன்றிக்காட்டில் ஸ்தனம் வேறுபட்டும், தேகம்வற்றியும், அழுலையுண்டாக்கியும், அதிநித்திரையுண்டாக்கியும், கண்களெரிச்சலை யுண்டாக்குமென்றறியவும், இனி அடியிற்சொல்லுங் குணங்களுக்கெல்லாம் அதர்வணவேதங்களாலும் தந்திரங்களாலும் ஒழிக்கவேண்டுமென்றறியவும்.

௩ - வது.

பூதநாடி ஊசிமுனையைப்போல் நீண்டுதோற்றில் உதிரயாடன் வசிக்கும் இரவில் புணர்ச்சிசெய்யும் பாவனையாயும் தோற்றும், அன்றி தேகநோக்காடும், விகாரகுணமும் உண்டாகுமென்றறிக.

௪ - வது.

பூதநாடி ஒருவன் தலையிழுத்துக்கொள்வதைப்போல் பின்வாங்கில் பிரமராட்சசியென்னும் பேய்வசிக்கும், அதன்குணம் வாசனை

முதலியதும்நீக்கி, கயரோகம்போல் தேகம்வற்றியும், தன்னையறியாத மயக்கமும் உண்டாகுமென்றறிக.

ரு - வது.

பூதநாடி வண்டைப்போன்றுறைந்தால், அக்கினிமாடன் வசிக்கும், அதன்குணம் பயப்படுந்தன்மை, வார்த்தைபிசகல், அக்கினியிடத்தில் பிரியமுதலிய குணமுண்டென்றறியவும்.

சு - வது.

பூதநாடி பாம்பைப்போல் நெளியுமாயின் இருளனென்னும்பேய் வசிக்கும் அதன்குணம் மதுபானத்தின்மேலிச்சையும், சில்லரைசேஷ்டையும் உண்டாக்குமென்றறியவும்.

எ - வது.

பூதநாடி வலியன்வால்போல் அசைந்துநடக்கில் சுடலைமாடன் வசிக்கும், அதன்குணம் விபூதி உடம்பெங்கும் பூசிக்கொள்ளுவதும், பயப்படாதநெஞ்சமுமாகிய குணத்தை உண்டாக்குமென்றறியவும்.

அ - வது.

பூதநாடி மடமடென்றுநடக்குமாயின் வண்ணாரமாடன்வசிக்கும் அதன்குணம், பிடரியும் கழுத்தும் நொந்தும், தேகம் கொதித்தும், உதிரம்கக்கியும் இத்தகையகுணத்தை உண்டாக்குமென்றறிக.

கூ - வது.

பூதநாடிதாயைக்காணக்கன்று முன்னும்பின்னும்பார்க்குமாபோல் பின்னும் முன்னும் ஜாடிநிற்கில் காட்டேரியென்னும் பேய்வசிக்கும், அதன்குணம், தலைவிரித்தல், அசுத்தசெய்கை, முகம்பாழடைதல், கைகாலசதி, அதிகபோஜனம்,இறைச்சிமுதலியது மருந்தலாகியகுணங்களை யுண்டாக்குமென் றறியவும்.

ய - வது.

பூதநாடி பிணத்தைப்போலசையாமனிற்கில் அகாலமரணமாய் விட்டவர்கள் காலமுடிவுவரை அலையையாயின பேய்வசிக்கும், அதன் குணம், தேகம்வற்றும்,வாய்வுமிகுக்கும்,பிரமித்திருக்கும் குணங்களை யுண்டாக்குமென்றறியவும்.

யக - வது.

பூதநாடி குரங்குபோலக்குதிக்கில் குட்டியென்னும்பேய்வசிக்கும் அதன்குணம், ஓரிடத்தில் உட்காரவொட்டாது, நாய்போலலையும், விகாரமாயிருக்குமாகிய குணங்களைத் தருமென்றறிக.

யஉ - வது.

பூதநாடி ஜடராக்கினிபோலக் காங்கைமீறிப்பேசில் ஏவல்களா லே டற்பலகிரகங்கள்வசிக்கும், அதன்குணம், சொப்பனத்தில் குரங் கு, நாய்கூட்டங்களும், விசேடபயமும், உண்டாக்குமென்றறியவும்.

பயித்தியநாடி அறிய.

பித்தநாடி சவலைப்பிள்ளையைப்போலும், அன்னம், மயில், காகம் போலும், ஐயநாடியானது அடைக்கலம், புறா, கோழிபோலும், வாதம், ஆமை, தேரை, காடையைப்போலும் நடந்திடினும், அல்லது மூன் றுநாடிகளும் தொந்தித்து ஒருங்குசேர்ந்து அரவத்தைப்போலும் நடக்கிலும் பயித்தியநோயெனக் கண்டுகொள்க.

மரணக்குறிகள்.

மூஞ்சூரைப்போல் முகம்நீண்டும், தேகமுழுமையும்வற்றி உலர் ந்து நரம்புகள் வெளிப்படையாயும், கண்களிரண்டும் பஞ்சடைந்து மிருந்தால் அதிசீக்கிரம் மரணம் வருமென்றறியவும்.

உ - வது.

பாயில்படுத்தும், எழுந்திருந்தும், மேல்மூச்சுவிட்டும், இளைத் தும், இருவிழிகளும் மலரவிழித்தும், நெஞ்சில் சேத்துமம் நடந்து அடைப்பித்துமாகிய இத்தகையகுணங்களிருக்கில் மரணம் அடுத்த தென்றறியவும்.

ந - வது.

திரிநாடிகளில் ஒருநாடி மார்பின்கீழ்பதறி நடந்தும், உடம்பு வீங்கியும் சுவாசமேற்கொண்டுமிருக்கில் இறப்பானென்பதற்கு ஐய மில்லையென்றறியவும்.

சு - வது.

முதுகும், வயிறும், காலும், சிசனம், அல்லது யோனியும்வீங்கி நினைவுதடுமாறிநிற்கில் மரணம் நிச்சயமெனக்கொள்க.

ரு - வது

செவியடைந்தும், கன்னம், நெற்றி, மூக்கு, வியர்த்தும், நாவு முள்போலாகியுமிருந்தால் நிச்சயமரணமென்றுணரவும்.

சு - வது.

முகம் பஞ்சடைந்தும், கண்கள் இடிவிழுந்தும் நாளுக்குநாள் மேனிகுலைந்தும், புத்திதடுமாறியும், கண், மூக்கு, வாய், செவி, உள் ளங்கை கால்முதலியவை வெளுத்துக்காட்டில் மாதம் ஒன்றில் கால னூர்பதிபோவது நிச்சயமெனக்கொள்ளவும்.

எ - வது.

இருகண்கள் சொருகலிட்டும், நெஞ்சுலர்ந்தும், கண்கள் கோவ்வைப்பழம்போன்றும், யாதின்மேலும, பிரியப்படாமையுமிருந்தால் அந்தகன்பதி ஏகுவானென்றறிக.

அ - வது.

புறங்கை, புறங்கால், மார்புமுதலியவைவீங்கியும், நாவரண்டும், இளைப்பெய்தலும், நெஞ்சில் பயமாயிடித்தலும், தோலும், ஏலும்பும் படபடத்தசைதலும் ஆகியகுணங்காணில் மாலும் பிரமனும் மீட்டப்படாதென்றறியவும்.

கூ - வது.

நாட்குநாள் பலயீனப்பட்டும், எச்சில் உமிழும்போது தூரம் போய்விழாமல் உதட்டிறப்பட்டு தனதிடத்தில்விழுதலும், நடந்துபோகும்போது-ம-அடிக்கொருவிசை திரும்பி சற்று உறுத்துப் பார்ப்பதும், அகங்கையால் முகந்துடைத்தலும், நாவைஅடிக்கடிபாம்பைப் போல் நீட்டலும் ஆகியகுணங்கள் வாய்த்திருக்கில் யாதொன்றுக்கும் பயப்படாமல் கூடிய சீக்கிரத்தில் மரணமாவார்களென்று சொல்லலாம்.

ய - வது.

இராக்காலங்களில் நட்சத்திரங்கள்தெரியாமல் பகற்காலங்களில் புலப்படினும், பூரணச்சந்திரன் புகைபோல் மழுங்கிதோன்றினும், வானவெல்லை கரியென்னு மியானையைப்போன்று காணினும, எண்ணை, நெய், தயிர், பால் இவைகளில் தன்முகம்தோன்றுவிடினும் மரணகாலம் சமீபித்ததென்றறிக.

இன்னும் மரணக்குறிகளும், மரணநாடிக்குறிகளும், தொடுமரணக்குறிகளும், திரிநாடிகளின பேதாபேதங்களால்வந்தெய்தும் சாத்தியாசாத்தியங்களேயும் உ-ம்-பாகத்தில் அச்சிடுவோமாக.

தேகவிலக்கணம்.

வாததேகக்குறி.

கருஞ்செம்மைதேகமும், மடவார்மேல் அற்பவாசையும், அற்பவுண்டியும், அதிபோகமுருமையும், எரிப்புள்ளவைகளை உண்ணுதலும், அற்பதாதுவுமுடையான் வாததேகியென்றறிக.

பித்ததேகக்குறி.

சிவப்பும் மிருதுவுமுள்ளதேகமும், சித்தினிமடவார்மே லதிகபிரியமும், இடைவிடாப்போகமும், நாணயவஸ்திரமுடுத்தலும, அற்

பயோஜனமும், புளித்தபதார்த்தமும், காரமுள்ளதையுண்ணலும், ஆசாரம்பொருந்தலும், பெரியோரைக்காணலும், ஞானமுதலியதுமுணர்தலும், கோபித்தவரைத்தணித்தலும், சொற்கவிவீரமும், தெளிவாய்ப்பேசலுமுடையவன் பித்ததேகியென்றறிக.

பித்தவாத தேகக்குறி.

பொதுநிறமுள்ளதேகமும், நற்குணமும், கிருபைகூர்தலும், சரியை கிரியா யோகஞானமுணர்தலும், பரிமளமணிதலும், கூரியபுத்தியும், குயில்போன்ற வினியசொல்லும், எரிப்பு, புளிப்பு, இவைகளைப்பிரியமாயுண்ணலுமுடையான் பித்தவாததேகியென்றறிக.

பித்தசேத்துமதேகக்குறி.

செண்பகமலர்போன்றமேனியும், புளிப்பினிப்புண்ணலும், மெல்லியராசையும், நயமுள்ளவாக்கும், இசையுள்ளகுரலும், நல்லறிவும், மூத்தோரை அடுத்தலும், அதியோகமும், இறப்பவர்க்கில்லையென்றதளிப்பனவுமுடையவன் பித்தசேத்துமதேகியென்றறிக.

சேத்துமதேகக்குறி.

காவிபோன்றமேனியும், இனிப்புண்ணலும், சரீரம்வியர்த்தலும், தேனுற்பிரியமும், இடிபோற்குரலும், பொய்மெய்யாக்கலும், வணக்கமும் உடையவன் சேத்துமதேகியென்றறிக.

சேத்துமபித்ததேகக்குறி.

கோரோஜனநிறமேனியும், புளிப்பினிப்பு அதிகமாய் வேண்டலும், சிவந்தரோமமும், காம்பீரசொற்களும், பொய்சொல்லாத சத்தியமொழியும், வீரமும், மனத்திடமும் உடையான் சேத்துமபித்ததேகியென்றறிக.

சேத்துமவாததேகக்குறி.

கறுமைதேகமும், அதிகஉண்டியும், புளிப்பு, எரிப்புண்ணலும் தூலதேகமும், புவிபுகழ்தலும், மறையோரைப்போற்றலும், வீரமும், வேதமுணர்தலும், சத்தியநெறியும், பெரியோரைப்போற்றலுமுடையான் சேத்துமவாததேகியென்றறிக.

வேறுவிதக் குறிகள்.

மலக்குறி.

வாதரோகிகளுக்கு மலங்கறுப்பாம், பித்தரோகிகளுக்கு மஞ்சள்நிறமாம், சிலேற்பனரோகிகளுக்கு வெண்மைநிறமாம்.

## நீர்க்குறி.

வாதரோகிகளுக்கு சிறுநீர்விடும்போது அத்துவாரவழியில்கடுத்தும், நொந்தும், சிறுத்தும் பொருமிவிழுந்தும், பித்தரோகிகளுக்கு நீர்சிவந்தும்,யெரிந்தும், கருக்கும்,கடுத்தும்விழும், சிலேஷ்பனரோகிகளுக்கு நீர்வெளுத்தும், உரைந்தும், பெருகியும் விழும், தொந்த ரோகிகளுக்குப் பற்பலவிதமாயிருக்குமென்றறியவும்.

## கண்கள்குறி.

வாதரோகிகளுக்கு விழிகள்கறுத்தும், இமை தாழ்ந்துமிருக்கும்,—பித்தரோகிகளுக்கு விழிகள் மஞ்சளாயும், செந்நிறங்கலந்ததாயுமிருக்கும், ஐயதேகிகளுக்கு விழிகள்வெளுத்திருக்கும், தொந்த தேகிகளுக்கு பற்பலநிறமுளதா யிருக்குமென்றறியவும்.

## நாக்குறி.

வாதரோகிகளுக்கு நாவு உயரமதாய்த் தடித்திருக்கும், பித்த ரோகிகளுக்கு கசந்து மஞ்சளாயிருக்கும், ஐயரோகிகளுக்கு வெளுத்து வழுவழுத்து நெய்தலாயிருக்கும்.

## தந்தக்குறி.

வாதரோகிக்கு தந்தங்கள் பழுப்பாயிருக்கும், பித்தரோகிக்கு மஞ்சளாயிருக்கும், சிலேஷ்பனரோகிக்கு வெளுத்திருக்கும், தொந்த ரோகிக்கு பற்பலவிதமாயிருக்குமென்றறியவும்.

## நோய்கள் வரும்விதம்.

இளந்தைப்பருவத்தில் தையலார்வலையிற்சிக்கி நாடோறும்லீலா விநோதம்புரிதலாலும், அதிகநடைநடத்தலாலும், அகாலபோஜனத்தினாலும், பதார்த்தபேதங்களினாலும், ஆகாரமில்லாக்காலங்களில் சையோகித்தலாலும், வயிறுநிறையப்புசித்து சிற்றின்பம் மூட்டுதலாலும், ஏகிரிவஸ்துவைப்புசித்தலாலும், ஒருவர் மலஜலம் விட்டதின்மேல் தான்விடுதலாலும், உண்டவுடன் நித்திரைசெய்தலாலும், வெகுதூரம்போய்வந்தவுடன் காலில் ஜலம்விடுதலாலும், மிகக்கஷ்ட வேலைசெய்துவந்தவுடன் குளிர்ந்தஜலத்தில்குளித்தலாலும், மாதர்கள் ரஜஸ்வலையான எட்டுநாளைக்குமுன் புணர்தலாலும், பொருளின்மையால் மிகவருந்தி துக்கித்தலாலும், மூலத்திலிருந்து விசேடதீப்பொறிஎழும்பி சிரசளவின்முட்டி அங்குஜொலித்திருக்கும் விந்துவை இளகச்செய்து அத்தீயானது உடலெங்கும் வியாபித்து வாய்வுசேர்ந்து வெள்ளை, சூலை, குட்டம், கிரந்தி, புத்து, பவுத்திரம், பிளவை, அரையாப்பு, கண்டமாலை, ஒட்டியப்புண்ணு, கரப்பன்சிரங்கு, குன்மம்,

மலநீர்க்கட்டு, காசம், பேதி, கிராணி, அதிசாரம், பாண்டு, காமாலை, பீனிசம், தந்திமேகமாகிய இன்னும் பற்பலவியாதிகளை உண்டாக்குமென்றறிக.

### ௪௪௪௮-வியாதிகளின் தொகுப்பு.

வாதம்-௮௪-பித்தம்-௪௮-சேத்துமம்-௯௬-தநுர்வாய்வு-௩௱-சயம்-௭ பெருவயிறு ௮-சூலை-௨௱-பாண்டு-௰-நேத்திரநோய்-௯௬-சிலந்தி-௬௮ சன்னி-௭௬-வழலை-௯௫-சுரம்-௬௪-மகோதரம்-௭ வீக்கம்-௫ உதிரநோய்-௰௬-பிளவை-௰-படுவன்-௰௧-பீலி ௮-உருவசியம்-௫-பொறிகறப்பான்-௯௰-கெண்டை-௰-குட்டம்-௰௮-கதிர்வீச்சு-௩-மதிவட்டை-௫-இசிவு ௬-மூர்ச்சை-௭-வேலிநோய்-௪௬-மூலம்-௯-சுழலை-௰-பீநிசம்-௪-கடிவிஷம்-௭௬-கிராணி-௨௫-பல்நோய்-௭௫-மாலைக்கண்-௨௰-அதிசாரம்-௨௫-கட்டி-௰௨-கிருமி-௬ முட்டுநோய்-௩௰-மூதிர்நோய்-௨௰-சத்தி-௫-கல்லடைப்பு-௮௰-வாய்வு-௯௰-திமிர்நோய்-௰-மேகம்-௨௧-நீராம்பல்-௫-காதுநோய்-௰-விக்கல்-௰-அரோசியங்கள்-௫-மூக்கறுப்பன்-௰, கடிவிஷம்-௫௱-குத்துவெட்டு-௭௱-கிரந்தி-௪௮-பொறிவிஷம்-௮௱-துடிநோய்-௱-பிள்ளைநோய் ௱-குமுளி-௭-விப்புருதி ௰௮-விஷபாகம்-௰௬-பிறநீர்க்கோவை-௨௱-நடுக்கல்-௬-ஆக-௪௪௪௮-வியாதிகளெனப் பெயர்பெற்றது இந்நூலில் சிலவியாதிரோகங்கள் கூறுவோம் மற்றது ௨-ம்-பாகம்-௩-ம் பாகமாக வழியே சொல்லிக்கொண்டுவருவோமாக.

### சுரரோகங்களின் தொகைகள்.

வாதசுரம், பித்தசுரம், ஐயசுரம், வாதபித்தசுரம், வாதசிலேட்டுமசுரம், சிலேத்துமபித்தசுரம், சந்நிபாதசுரம், அபிகாதசுரம், தாபச்சுரம், அபிசாரசுரம், அபிஷங்கசுரம், பூதாவேசசுரம், அவுஷகாந்தசுரம், விஷசுரம், கோபச்சுரம், பயச்சுரம், களிர்ச்சுரம், துக்கசுரம், காமச்சுரம், சந்தசுரம், சத்தசுரம், அந்தியத்துகசுரம், துவியாகிதசுரம், திரியாகிதசுரம், சாதுர்த்திகசுரம், சாரீரசுரம், மாதஸிகசுரம், செளமியசுரம், தீட்சண்யசுரம, உட்சுரம, புறச்சுரம், பிராகிருதசுரம், வைகிருதசுரம், சாத்தியசுரம, அசாத்தியசுரம, சாமச்சுரம, நிராமச்சுரம, வாதசரீரசுரம், வாதமானஸிகசுரம, வாதசெளமியசுரம், வாததீட்சண்ணியசுரம, வாதவுட்சுரம, வாதபுரச்சுரம், வாதபிராகிருதசுரம், வாதவைகிருதசுரம்; வாதசாத்தியசுரம, வாதஅசாத்தியசுரம, வாதசாமச்சுரம், வாதநிராமச்சுரம், குளிர்ச்சுரம பிராங்கிதசுரம, காளகண்டசுரம், நாரிசுரம், அநாகிதசுரம, கண்டசுரம், முறைச்சுரம், நாகசுரம், காந்தசுரம், மந்தசுரம், சோபசுரம, பராக்கிரசுரம், மைகிருதசுரம், பாதசுரம் வைசூரிசுரமுதலிய சுரங்கள் அறுபத்திநாலெனக் கூறலாயினர்.

## சுரங்கள் உற்பத்தி.

மேற்கூறிய சுரங்கள்யாவும் அறுசுவைப்பேதங்களினாலும், நடக்கைபேதங்களினாலும், வாதபித்தசிலேத்துமமென்னும் மூன்றுதோஷங்களினாலும், நரம்புகளின்தமர்களையும்,உரோமத்தமர்களையும்அடைப்பித்து சடராக்கினிமேலிட்டெழுப்பி சடமுழுதும் வியாபித்து, கைகால்கள்முதலிய அவயவாதிகளைநோப்படுத்தி சுரரோகங்கள்வருமென்றறியவும்.

### வாதசுரம் வருதல்.

வாதநாடி சர்ப்பத்தைப்போல மெல்லச்சீறித் தனித்துநின்றால் கால்கைகள்பெருத்து நோக்காடும்,குடலைப்பிறட்டியும்,மலஜலங்களைக் கட்டியும், உடம்பெங்கும் குடைந்தும், குதத்தையிறுக்கியும், வியர்வைதந்தும், முகமும் உதடுங் கறுத்தும், சரீரமெல்லாம் தடித்தும், மெய்நடுக்கியும், நாவரண்டும், திமிரெடுத்தும், உஷ்ணம்பாரித்தும், மயிர்க்குச்சிலிட்டுமாகிய இத்தகையகுணங்களோடுவருமாம் வாதசுரமென்றறிக.

### நிவாரணக்கியாழம்.

விஷ்ணுகாந்தி, கண்டங்கத்திரி, சிறுதேக்கு, பற்பாடம், பேராமுட்டி, நன்னாரி, சித்திரமூலம், நற்சங்கன்வேர், வெள்ளறுகு, சதகுப்பி, சிறுகாஞ்சோரி, சிற்றரத்தை,கழற்சிப்பருப்பு,இவைகள்வகைக்குப்பலம்-க, இடித்துதூள்செய்து ஆறுபடிஜலம்விட்டு-ஐ, படியாகக்காய்ச்சி வேளை ஒன்றுக்கு வ, படிவீதம்-ங-வேளை சுடவைத்து சாப்பிடவும், வாதசுரம் நீங்கும், இச்சாபத்தியம்,அப்படிநீங்காவிடில்அடியிற்சொல்லியதுபோல் சாப்பிடவும்.

### உ - வது மருந்து.

ஜாதிலிங்கம், பலம் ஒன்றை முலைப்பாலில் மூன்றுநாளூரவைத்து எடுத்துக்கொண்டு, வீரம், படிகாரம், வெடியுப்பு, அண்டோடு, இவைகளை வகைக்குப்பலம், காலாகச்சேர்த்து கோழிமுட்டையின் வெண்கருவிட்டாட்டி-ம-பங்குசெய்து, ஒருபங்கை மேற்படி லிங்கத்திற்கங்கிபூட்டி-ங-சீலைசெய்து, மணல்மறைவில் புடம்போடவும்,இப்படி பத்துமுறைப்புடம்போட்டுப் பின் இஞ்சிச்சார், தேன், முலைப்பால், இவைமூன்றும், ஒன்றுபடுத்தி ஷை லிங்கத்தில் - ம - உறை உறைத்து மூன்றுநாள் ஆறுவேளை சாப்பிடவும், இச்சாபத்தியம்,இன்னுஞ்சொல்லுவோமாக.

ந - வது மருந்து.

சுக்கு, சிற்றரத்தை, ஓமம், வாய்விளங்கம், அதிமதுரம், கோஷ்டம், ஜாபத்திரி, லவங்கம், லவங்கப்பட்டை, பேய்ப்புடல், சிந்தில், நன்னாரி, சிறுகாஞ்சோரி, சிறுதேக்கு, கோரைக்கிழங்கு, தேவதாரம், குங்குமப்பூ, கோரோஜனை, பச்சைகற்பூரம் வகைக்கு விராகனெடை-உ, இவைகளைச் சூரணித்து மலைத்தேன்விட்டாட்டி குன்றிமணி போல மாத்திரைசெய்து பனவெல்லத்தில்ஒருமாத்திரைவைத்துஏழுநாள் பதினான்குவேளை சாப்பிடில் நீங்காதவாதசுரம் வீடுவிட்டுக் காடு போகுமென்றறிக. பத்தியம் கடுகு, நல்லெண்ணெ, புளிப்பு, தயிர், பால், இறைச்சி, சீதளப்பண்டம், பொடி - சுருட்டு-லாகிரியுந் தள்ளி மூன்றுநாள் மறுபத்தியம்காக்கவும்,பதினேழாநாள் நீரைவார்க்கவும், அன்றி மூன்றுதிங்கள் மைசயோகமுதலியதும் தள்ளவும்.

பித்தசுரம் வருதல்.

பித்தநாடி சிட்டுபோல்குதித்து வாதத்திற்கும், ஐயத்திற்கும் மாத்திரை அதிகப்பட்டு அரசுசெய்யில் அதிகநித்திரையும, மலஜலம் மஞ்சள் சிவப்புநிறமாயும், வயிர்கழிதல், வாந்தி, விக்கல், வாய்பிதற்றல், வாய் வேம்பைப்போன்றிருத்தல், மூர்ச்சித்தல், நாவரண்டல், அசதி, எழுந்துஓடல், பித்தனைப்போலிருத்தல், சந்தோஷித்தல், வியசனப்படல், முகம், உள்ளங்கை, உள்ளங்கால்முதலியதும் வியர்வை விடுதல், சுரம்வருதலாகிய இத்தகையகுணங்களோடு பித்தசுரம் வருமென்றறிக.

நிவாரணக்கியாழம்.

தேத்தான்கொட்டை, எட்டிவிரை, கண்டங்கத்திரி, பிரம்பின் மூலம், சிறுபயறு, சுக்கு, கிராம்பு, வாய்விளங்கம், நீலிவேர், நெற்பொறி, ஏலம், நீர்முள்ளி, நெல்லி, வில்வவேர், பிரக்கு,கோஷ்டம், கொடிவேலி, பேய்ப்புடல், சித்தாமுட்டி, வில்வவேரு வகைக்குப் பலம்-க, இவைகளை இடித்து தூள்செய்து படிஜலம்விட்டுக்காயச்சி எட்டிலொருபங்காக்கி மூன்றுவேளைசாப்பிடத்தீரும். இச்சாபத்தியம் இன்னுஞ்சொல்லுவோமாக.

உ - வது கியாழம்.

சுக்கு, ஆனைத்திப்பிலி, நெல்லி, நீர்முள்ளி, வில்வவேர், பாதிரிவேர், விலாமிச்சு, சிறுகாஞ்சோரி, அதிமதுரம், கோஷ்டம, செவ்வல்லி, நன்னாரி, நிலவாகை, சீரகம், கொத்துமல்லி,தும்பைவேர், பேரீச்சங்காய், வகைக்குப்பலம்-க, இவைகளை இடித்துத் தூளாக்கி ந, படி

ஜலம்விட்டு எட்டிலொன்றாகக் காச்சி இறக்கி மூன்றுவேளை கொடுக்கவும் பித்தசுரம் விட்டோடிப்போம், இச்சாபத்தியம் இன்னுஞ் சொல்லுவோமாக.

க - வது கியாழம்.

வில்வவேர், அதிமதுரம், இலுப்பைவேர், சுக்கு, பரங்கிச்செக்கை, கோரைக்கிழங்கு, பேய்ப்புடல், கருஞ்சீரகம், நாய்த்துளசி, கரசலாங்கண்ணி, தூதுவளை, நொச்சில், ஆடாதோடை, வகைக்குப் பலம்-க, இவை இடித்துப் பொடித்து படிஜலம்விட்டு நாலிலொன்றாகக்காச்சி அறுவேளைத்தாக்க பித்தசுரம்விட்டோடிப்போகும், இச்சாபத்தியம்.

ஐயசுரம் வருதல்.

சிலேற்பனநாடியானது, வாதத்திற்கும் பித்தத்திற்கும் மாத்திரைகால் அதிகப்பட்டு பூனையைப்போலப்பதுங்கியும், பாச்சல்கொண்டும் நடந்தால் நாக்கு, முகம், மெய்வெளுத்தல், மார்நோதல், இருமல், இளைப்பு, ஈளை, வாய்துவர்த்தல், நாவுருசியில்லாமை, மூச்சுவிடுமுன் விக்கல்வருதல், நாவரட்சிகாணல், மேன்மூச்சுவிடுதல், தினவெடுத்தல், தியங்கலாகிய இத்தகையகுணங்களோடு ஐயசுரம் வருமென்றறிக.

நிவர்த்திகியாழம்.

சுக்கு, மிளகு, திப்பிலி, அதிவிடயம், பற்பாடகம், சிறுகாஞ்சோரி, தொட்டிவேர், கோரைக்கிழங்கு, நன்னாரி, வெட்பாலை, லவங்கம், வில்வவோடு, பொன்முசுட்டை, அதிமதுரம், பேரீச்சன், வேம்பு, பெருங்குரும்பை, நெய்தற்கிழங்கு, தூதுவளை, ஆடாதோடை, கண்டங்கத்திரி இவைகளைநசிக்கி இருநாழி நீரிற்போட்டு உழக்காக்கி அந்த உழக்குகியாழத்தை மூன்றுபங்காக்கி மூன்றுவேளையும் தேன் விட்டுக்கொடுக்கவும, இன்னுஞ்சொல்லுவோமாக.

உ - வது மருந்து.

ஜாதிலிங்கத்தை-க-நாள் முலைப்பாலில்ஊரப்போட்டு பின்எடுத்து இஞ்சிச்சார், தேன், குப்பைமேனிச்சார், நிம்பழச்சார் இவைநான்கையும் ஒன்றுபடுத்தி, லிங்கத்திற்கு-ச ஜாமம் சுருக்குதாக்கினலிங்கம் க, ஆவின்பாலில் ஒருஜாமம் வேகவைத்தெடுத்தநாபி-க, சாணிப்பாலில் ஊரவைத்துப்பின் உப்பு, புளி, மிளகாய் மூன்றையுங் கரைத்து-க-மணிநேரம் வேகவைத்தெடுத்த வாளம்-க, வெண்காரம்-க, திப்பிலி-க, மிளகு-க, இவைகளை-ச ஜாமம் நிம்பழச்சாற்றாலாட்டி குன்று

மணியளவு மாத்திரைசெய்து மாத்திரைஒன்றை இஞ்சிச்சாற்றில்கொடுக்கவும், மூன்றுநாள் ஆறுவேளைகொடுக்கத்தீரும். பத்தியம் - புளி, கடுகு, நல்லெண்ணைமுதலியதுமாகா.

௩ - வது மருந்து.

மேற்சொல்லியதைப்போல் சுத்திசெய்தலிங்கம்-க, வெள்ளெருக்கம்பாலில்-ச-ஜாமம் சுருக்குதாக்கின சங்குபாஷாணம்-க, வெண்மிளகு-க, இவைகளை எலுமிச்சம்பழச்சாற்றாலாட்டி சிறுபயறுவீதம்குளிகைசெய்து குளிர்ந்தஜலத்தில் ஆறுமாத்திரை ஆறுவேளை தாக்கவும். பத்தியம்-உப்பு, புளி, ஆகாது-௫-நாள் காலை மாலை மிளகுகியாழமேய்ந்து-௬-ம்-நாள் ஓமத்தால் ஸ்நானஞ்செய்து சுட்டபுளிகூட்டவும், ஐயசுரம் நீங்குமென்றறியவும்.

வாதபித்தசுரம் வருதல்.

வாதமும் பித்தமும் தொர்திந்து ஐயத்தில் வீசம்மாத்திரவாங்கிக்கொண்டு ஓநாய்போல்நடக்கில் கீல்சள்நோதல், இடுப்புளைவு, வாயூரல், வாந்தி, விக்கல், கொட்டாவி, விகாரபுத்தி, பிரமை, தாகம், உரோமஞ்சிலிர்த்தல், தேசங்குன்றல், ஏப்பம், வாய்கைத்தல், அதிகநித்திரை, நெஞ்சுலரல், வாயூரல், மலம்வெளுத்தல் ஆகிய குணங்களோடு வாதபித்தசுரம் வருமென்றறிக.

நிவாரணமருந்து.

ஒருபலம்கெவுரியை மூன்றுநாள் முலைப்பாலில் ஊரப்போட்டுப் பின்மேற்படிபாலால்-ச-ஜாமம் சுருக்குதாக்கிடவும், ஒருபலம்தாளகத்தைக் கற்சுண்ணாம்புக்குள்வைத்து கழுதையின்சிறுநீரால்-எ விசை தாளிக்கவும், இவ்விதமாகச் சுத்திசெய்த கெவுரியையும் தாளகத்தையும் ஒன்றுபடுத்தி எலுமிச்சம்பழச்சாற்றால்-உ-ஜாமம் ஆட்டியும், முலைப்பாலில்-ச-ஜாமம் ஆட்டியும், உளுந்துபோலக் குளிகைகட்டி மாத்திரை ஒன்றுவீதம் முலைப்பாலில்-௩-நாள் கொடுக்க பித்தமெல்லாம் மேல்நோக்கும், அதிகவாந்தியானாலும், பத்தியம் தவறினாலும், மிளகுகியாழம் கொடுக்கவும். பத்தியம்-புளிதள்ளவும், துவரை, கத்திரிப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு முதலியதுமாகும், இன்னுஞ் சொல்லுவோமாக.

உ - வது மருந்து.

அபினி·விருகனெடை-சு, சுக்கு எ, திப்பிலி-அ, சீரகம்-கூ, மிளகு-௰, இவைகளையெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து விஷ்ணுகாந்தி கியாழத்தால்-ச-ஜாமம் ஆட்டி குன்றிமணியளவு குளிகைசெய்து ஒருகு

ளிகையை விஷ்ணுகாந்தி, சீரகம், வெற்றிலைச்காம்பு ஒன்றுசேர்த்து கியாழமிட்டு-கூ-வேளை கொடுக்கவும், பத்தியம் புளிதள்ளவும்.

ந - வது மருந்து.

சுக்கு, மிளகு, சீரகம், ஏலரிசி, திப்பிலி, ஓமம், லவங்கம்,வெண்காரம் இவைகள் வகைக்குச் சூரணம் விராகனெடை-௨, லிங்கம் ௨, பாஷாணம்-வ, ஒக்கச்சேர்த்து நிம்பழச்சாற்றாலாட்டி உளுந்துபோலக் குளிகைசெய்து தேனில் ஆறுவேளைதாக்கவும், பத்தியம் புளியாகாது, வாதபித்தசுரம் விட்டோடிப்போகும், அன்றி மேற்கூறிய சூரணங்களை ஆவின்பாலில் பிட்டுவைத்துக்கொள்ளவும், பாஷாணத்தை மிளகுகியாழத்தில் சுருக்குதாக்கவும், லிங்கத்தை முலைப்பாலில் ஒரு ஜாமம் சுருக்கிடவும்.

வாதசிலேத்துமசுரம் வருதல்.

வாதத்தில் ஐயம்சார்ந்து ஊடுருவத்தாக்கி நேசித்து கௌதாரியைப்போன்றுடக்கில் குளிர்நடுக்கல், நாசியில்ஜலம்வழிதல், நெற்றிவியர்த்தல், இறைப்பு, மலச்சிக்கல், கீல்கள்நோதல், இருமல், உடம்புநெளிதல், நாவெளுத்தல், அரோசிகம், கண்களிருணடைசல், சோகமூர்ச்சை ஆகியகுணங்களோடு வாதசிலேத்துமசுரம் வருமென்றறிக.

பரிகாரமருந்து.

ஒருபலம் லிங்கத்தை எலுமிச்சம்பழச்சாற்றில்-ச-ஜாமம் சுருக்குகொடுத்து நாட்சென்ற இரும்புச்சிட்டத்தைக் கொடிவேலி கியாழத்திலாட்டி லிங்கத்துக்கங்கிபூட்டி மணல்மறைவில் மூன்றுபுடம் போட்டெடுத்துப்பின் கற்பூரம்-பலம்-க-பளிங்குசாம்பிராணி பலம்-க-ஒன்றாய்க்கூட்டி தீப்பறக்கமெழுகுபதமாகஆட்டி பத்துபங்காக்கிஒரு பங்கை சீலையிலூட்டி மேற்படி லிங்கத்தை வைத்துருட்டி விளக்கில் கொளுத்திப்போட்டு ஆறினபின் சிட்டத்தைச் சுரண்டி இப்படி பத்துவிசைசெய்து லிங்கத்தைப் பதனம்பண்ணி தேனில்-ம உறைவுறைத்து திரிகடுகு சூரணமுங்குழப்பி ஆறுவேளைதாக்க வாதசிலேத்துமசுரம் நீங்குமென்றறியவும், இச்சாபத்தியம்.

௨ - வது மருந்து.

லிங்கம்-க, பூரம்-க, வீரம்-வ, பாஷாணம்-ஹ,கெவுரி-வ,வெண்மிளகு-ந; இவைகளை ஒன்றுபடுத்தி, நிம்பழச்சாற்றால்-ச-ஜாமம் ஆட்டி, சிறுபயறுவீதம் குளிகைசெய்து தேனில்-ந-வேளைதாக்கவும்; கடுமையாகியபத்தியம், மேற்கூறிய லிங்கத்தையும், பூரத்தையும், முலைப்பா

லில்-ங-நாள் ஊறப்போடவும், நெல்லிகெந்தகத்தை ஓட்டில்வைத்து அடியில் தீப்போட்டுருகும்போது வீரம், பாஷாணம், கெவுரியை தனித்தனியே பிரட்டி எடுத்துக்கொள்ளவும்.

ங - வது மருந்து.

ஒருபலம் பூரத்தை, பாவையர்பாலில்-ய-நாள் ஊரப்போட்டுப் பின்வெள்ளைப்பூண்டு சாற்றில்-ங-ஜாமம் சுருக்குதாக்கி ஆறினவுடன் மேற்சுரண்டிவிட்டு ஓட்டில் வெடியுப்பு-பலம்-ரு-வைத்து மேற்படி பூரத்தைவைத்து மேலும் ரு-பலம் வெடியுப்புகொட்டி கோழிமுட்டை-ரு-உடைத்துவார்த்து ஓட்டடியில் தீயிட்டு கமலாக்கினியாக எறிக்க உப்புபொங்கி தீப்பிடித்துக்கருகியிருக்கும், அதனுள்புகையாமல் பூரம்நிற்கும், ஆறினபின் கருகியஉப்பை நீக்கிநீக்கி ய-விசை முன்போலசெய்யில் பெருமைவாய்ந்த பூரமானது தங்கம்போல் உருகிநிற்கும், இஞ்சிச்சார் அல்லது தேனில்தாக்க வாதசிலேத்துமசுரம் நீங்குமென்றறிக.

சிலேத்துமபித்தசுரம்.

வாதம் ஹ-பித்தம்-உ ஐயம்-உ ஆகநின்று பித்தமும் ஐயமும்ஒருங்குசேர்ந்துகுயிலைப்போலநடக்கில் சரீரம்நம்பித்தல், ஆயாசங்கொள்ளல், சோர்ந்துவிழுதல், கிறுகிறுப்பு, சுழலைமூர்ச்சை, சோம்பல் வாய்கசத்தல், இருமல், நாவரட்சியாகியகுணங்களோடு சிலேத்துமபித்தசுரம் வருமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

கெவுரி, தாளகம், கெந்தி, துருசு, பால்துத்தம், நாபி, வகைக்கு விராகனெடை-க, இவைகளை மிதிபாவையிலைச் சாற்றாலாட்டி சிறுபயறளவு குளிகைசெய்து இஞ்சிச்சாற்றில் மாத்திரை ஒன்றுவீதம் மூன்றுவேளைதாக்கவும், பத்தியம்-கடுமையாகியபத்தியம், மேற்கூறிய தாளகத்தை கற்சுண்ணாம்புக்குள்வைத்து பனங்கள்ளில் மூன்றுவிசை தாளிக்கவும், கெந்தகத்தை ஆவின்பாலில் ஒருநாள் ஊறவைக்கவும், துருசு, துத்தம், நாபி இவைகளை ஆவின்பாலில் வேகவைத்தெடுத்துக்கொள்ள யாவும் சுத்தியாகும்.

உ - வது மருந்து.

வெள்ளாட்டுப்பிச்சு, நாபிவகைக்கு விராகனெடை-சு, ஜாதிலிங்கம், சுக்கு, மிளகு, சீரகம், ஏலரிசி, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கடுகுரோகணி வகைக்கு விராகனெடை க, இவைகளை எலுமிச்சம்பழச்சாற்றாலாட்டி-உ-ஜாமமானபிறகு பயறு பிரமாணம்

குளிகைசெய்து கொடிவேலிகியாழத்தில் மாத்திரைஒன்றுவீதம் ஆறு வேளைதாக்கவும், சடுமையாகியபத்தியம் - மேற்கூறியநாபி, லிங்கத்தையும் முன்கூறியவண்ணம் சுத்திசெய்யவும், சூரணங்களையெல்லாம் ஆவின்பாலில் பிட்டுவைத்துக்கொள்ளவும்.

௩ - வது மருந்து.

வெள்ளைப்பாஷாணம் விருகனெடை-௬, ஜாதிலிங்கம்-௪ இவைகளை ஊமத்தைவேர்கியாழமிட்டு ஒருஜாமம்மைபோலரட்டி பயறுபிரமாணம் மாத்திரைசெய்து-௩-வேளை மிளகுநீரில்தாக்கவும், சடுகெண்ணையாகாது வெள்ளைப்பாஷாணத்தைக் கற்சுண்ணும்பில்வைத்து மிளகுகியாழத்தில் மூன்றுவிசைதாளிக்கவும், ஜாதிலிங்கத்தை முலைப்பாலிலும், எலுமிச்சம்பழச்சாற்றிலும் - ௰ - நாள் ஊறவைக்கவும் சுத்தியாம் சிலேத்துமபித்தசுரம் விட்டோடிப்போமென்றறிக.

தொந்தசுரம் வருதல்

சிலவேளை வாதம்-க, பித்தம் காலேஅரைக்கால், ஐயம் - காலேஅரைக்கால் மாத்திரையாகவும், பித்தமும் ஐயமும் ஒருங்குகூடுதலும் சிலவேளை வாதம் முக்காலேஅரைக்கால், பித்தம்-காலேஅரைக்கால், ஐயம்-அரைமாத்திரையாகவும், வாதமும் ஐயமும் ஒருங்குசேர்தலும், சிலவேளை தனித்தனிப்பாய்தலும், சிலவேளை வாதம் ஆமைபோலும், பித்தம் கோழிபோலும், ஐயம் அட்டை தவளைபோலும் பற்பலவிதமாய்நடக்கில் பித்தனைப்போல்பேசல். தெளிந்துபேசல், மயக்கம், கைகால்களுளைவு, இடுப்புநோதல், ஆசனக்கடுப்பு, நீர்சுருக்கு, கவலையுற்றல், மெய்நடுக்கல், அசதி, ஏப்பம், பசித்தல் ஆகிய குணங்களோடும், சிலவேளை மாலையிலும், சிலவேளை காலையிலும், சிலவேளை மத்தியானத்திலும், நாள்முழுமையும் தொந்தசுரம வந்தரசு செய்யுமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

அரிதாரம்-இடை-௫, துருசு-உ இவைகளை சீலையில் தோளாந்தரமாகக்கட்டி சற்சுண்ணும்பில்வைத்து ஆண்குழந்தைகள் மூத்திரத்தால் எ-விசைதாளித்துப்பின் கற்சுண்ணம் எடை-௪, நாபிக இவைகளை கற்றுழைச்சோற்றாலாட்டி பயறளவு குளிகைசெய்து ஓட்டில் வைத்து மேலேஓடுமூடி சீலைசெய்து கோழிபுடம்போட்டாறியபின்மறுபடியும் ஒருவிருகனெடை நாபிசேர்த்து, இஞ்சிச்சாற்றில் உ-ஜாமம் அரைத்து பச்சைப்பயறளவு குளிகைசெய்து தேனில்தாக்கவும், வாந்தியானால் மிளகுகியாழம்கொடுக்கவும், பத்தியம் பசும்பால், வெந்நீர்,

துவரை, அரைக்கீரை, முருங்கைப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு ஆகும், சுட்டபுளி வறுத்தவுப்புஆகும், மேற்கூறியஅவுஷதங்களுக்கெல்லாம் பத்தியம்தவறினால் நோய்கள் தீராதென்றறிக.

உ - வது மருந்து.

தாளகம் கழஞ்சிரெண்டு, கற்சுண்ணம் கழஞ்சிநாலு, மிளகு கழஞ்சிநாலு இவைகளைக் கோழிமுட்டை வெண்கருவாலாட்டி நாதளங்காய்ப்பிரமாணம் குளிகைசெய்து திரிகடுகுகியாழத்தில்கொடுக்கவும் தாளகத்தைச் சுண்ணாம்பில்வைத்து இரண்டுஜாமம் எரித்து சேர்த்துக்கொள்ளவும் முன்கூறியபத்தியம்.

௩ - வது மருந்து.

தாளகம் விருகனெடை-௫, துருசு-உ, நாபி க, சுற்சுண்ணம்-ச இவைகளைக் கற்றாழஞ்சோற்றால்-ச-ஜாமம் ஆட்டி துவரைப்பிரமாணங் குளிகைகட்டி மிளகுநீரில் அல்லது இஞ்சிச்சாற்றில்தாக்கவும், முன்கூறியபத்தியம்.

விஷசுரம் வருகல்.

வாதம் பித்தத்திலும், பித்தம் ஐயத்திலும், ஐயம் வாதத்திலுமாசப் பிரண்டு பிரண்டு நன்றாகம்போற் சீறிசீறிப்பேசுமாயின் இம்மைதெரியாமூர்ச்சை அசைவற்றிருத்தல், முகம கொள்ளிபோன்றிருத்தல், எரிச்சல் கருநாகம்போல் தேகமிருத்தல்இடைவிடாமல்அகோரசுரம ஆகியவண்ணமாய் மகாகொடுமைவாய்ந்த விஷசுரம் வருமென்றறிக.

பரிகாரமருந்து.

கெந்தகம் பணவெடை, ரசம் பணவெடை, நாபி பணவெடை, வெள்ளைபாஷாணம் பணவெடை, பொன்னூமத்தைவிரை பணவெடை, மிளகுகழஞ்சி ம இவைகளை ஊமத்தஞ்சாற்றாலாட்டி குன்றிமணியளவு வுண்டைசெய்து எலுமிச்சம்பழச்சாற்றில்தாக்கவும் கடும்பத்தியம்.

உ - வது மருந்து.

ரசம், நாபி, கெந்தி, தாளகம், லிங்கம், வாளம், வெண்காரம், சுக்கு, மிளகு, திப்பிலி வகைக்குகழஞ்சி ஒன்றுவீதம் எடுத்து கருப்பஞ்சாற்றாலாட்டி சிறுபயறளவு குளிகைசெய்து இஞ்சிரசத்தில் கொடுக்கவும், மேற்கூறியசரக்குகளை இதற்குமுன்சொல்லியிருக்கும்வாறுபோன்று சுத்திசெய்துக்கொள்ளவும கடும்பத்தியம்.

ங - வது மருந்து.

கெந்தகம், ரசம், தாளகம், வெள்ளைப்பாஷாணம், கடுகுரோகணி, பேய்ச்சுரைவிரை, வாளம், பொன்னூமத்தைவிரை சிவதைவேர், வெள்ளைக்காவளைவேர், சுக்கு மிளகு திப்பிலி வகைக்குக் கழஞ்சி-உ, மிளகுபலம்-ச-இவைகளை அல்லிப்பூச்சாற்றால் ஒருஜாமமும் வெந்நீரில் ஒருஜாமமும் ஆட்டி மிளகு அளவு குளிகைசெய்து வெந்நீரில் தாக்கிட விஷசுரம்ஓடிப்போம். மேற்கூறியபத்தியம், பாஷாணவகைகளையும், சூரணவகைகளையும் முன்கூறியதைப்போன்று சுத்திசெய்யவும்.

சுரங்கள்-சுச-க்கும் அவுஷதங்கள்.

ஜாதிலிங்கம், பச்சைநாபி, இந்துப்பு, ரசம், கெந்தி, வெண்காரம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், சிவதைவேர், எட்டிவிரை, சித்திரமூலம் வேர்பட்டையாகிய இவைகளெல்லாம் சதுரக்கள்ளிப் பாலாலாட்டி மிளகுஅளவு குளிகைசெய்து அனுபானங்களறிந்துகொடுக்கவும்

உ - வது மருந்து.

வெள்ளைப்பாஷாணம் விராகனெடை-ரு, பச்சரிசிதவுடு-ச இவைகளைக் கொத்துமல்லியாழத்தால் ஒருசாமமாட்டி பயறளவு குளிகைகட்டி சீரகக்கியாழத்திலிடவும்.

ங - வது மருந்து.

பெரியநத்தையைக் கொண்டுவந்து ரு-விராகனெடை தாளகத்தை அதன்வாயிற்செலுத்தி நாலுசீலைசெய்து குப்பைமேட்டில் மண்டலம் சமாதிவைத்து பிறகு கல்வத்திலிட்டு மிதிப்பாவைச்சாற்றாலாட்டி மிளகுஅளவு குளிகைகட்டி ஷை குளிகைஒன்று மிளகுஐந்து ஆறுவேளை கொடுக்கநீங்கும்.

ச - வது மருந்து.

சுக்கு, அதிமதுரம், ஏலம், ஜாதிக்காய், லவங்கப்பட்டை, சந்தனம், தேவதாரம், நன்னாரி, கோரைக்கிழங்கு, கோரோஜனம், கடுகு; கடுகுரோகணி, கோஷ்டம், இலுப்பைப்பூ, விலாமிச்சம்வேர், முந்திரிகை, பேரீச்சன் சடாமாஞ்சில், திப்பிலி, பச்சிலை வகைக்குக்கழஞ்சி-க-வீதம் கல்வத்திட்டு கறுப்பஞ்சாற்றாலும், இளநீராலும்-ச-ஜாமமாட்டி சுண்டக்காயளவு குளிகைசெய்து அந்நீரில் சீனிகூட்டி மாத்திரை ஒன்றுதாக்கவும்.

௫ - வது மருந்து.

வீரம்விருகனெடை-வ, பூரம்-ஒ, லிங்கம்-ஞ, பாஷாணம்-ஒ, நாபி ஒ, கெவுரி-ஒ, தாளகம்-வ, கெந்தி-உ, மிளகுபலம்-க இவைகளை எலுமிச்சம்பழச்சாற்றாலாட்டி. சிறுபயறளவு குளிகைசெய்து மிளகுகியாழத்திலிடவும், சுரங்கள்-கூச-ம் நீங்குமென்றறிக, அன்றியும் சுரங்களுக்குச்சொன்ன அவுஷதங்களில் பாஷாணவகைகள்சேர்ந்த அவுஷதங்கள் புசிப்பவர்களுக்கு பத்தியங்கள் சர்வசாக்கிறதையோடு காக்கவும், சுரரோகம் நீங்கினபிறகு ஒருமண்டலம் மிளகுகியாழம் உண்ணச்செய்யவும், அவுஷதங்களின் வேகங்களியாவும் வீறுகெட்டோடுமென்றறிக.

ஒவ்வொரு அவுஷதங்களும் இந்நூலிற்கூறியவாறுபோல் சுத்திசெய்துசேர்க்கவும், சுத்திசெய்யாஅவுஷதங்கள் ரோகத்தை வெல்லாதென்றறியவும்.

மற்றையசுரரோகங்களின் வரலாற்றையும், நாடிகள் நடைகளையும், செய்கைக்குறிப்புகளையும், அவுஷதபாகங்களையும், அதற்குற்றபத்தியங்களையும், சுத்திசெய்யும் விவரங்களையும் முறைமுறையேமுதற்பாகம், உ-ம் பாகம், ௩-ம் பாகமாக அச்சிட்டுக்கொண்டு வருங்கால் கொஞ்சங்கொஞ்சமாகச் சேர்க்கப்படும்.

இனி மூலரோகநாடிநடைகளையும், அதனாலுற்ற செய்கைகளையும், நிவர்த்திக்கு மவுஷதபாகங்களையும், சுத்திசெய்யும்வகைகளையும் சிலதுசொல்லுவோமாக.

## மூலரோக உற்பத்தி.



அதிசையோகத்தாலும், அதிககாரமுள்ளவஸ்துவை யுண்ணுதலாலும், அகாலபோஜனத்தினாலும், தனங்களைப்போக்கடித்தலாலும், மூத்தோரைவைதலாலும், கற்பழித்தலாலும், அதிதிகளைமனம்நோகச் செய்ததாலும், மோசம்பண்ணியதாலும், பசித்தோர்பார்க்க உண்டதாலும், வாக்கிலொன்றும் மனதிலொன்றுமாக வஞ்சனைகொள்ளுதலாலும் மூலரோகம் வந்தெய்துமென்றறிக.

### மூலரோகத் தொகைகள்.

நீர்மூலம், செண்டுமூலம், முளைமூலம், சிற்றுமூலம், வரண்மூலம், இரத்தமூலம், சீழ்மூலம், ஆழிமூலம், குமரகமூலம், வாதமூலம், பித்தமூலம், சிலேற்பனமூலம், தொந்தமூலம், வினைமூலம், மேகமூ

லம்; பவுத்திரமூலம், கிரந்திமூலம், குதைமூலம், புறமூலம், சுருக்கு மூலம், சவ்வுமூலம் ஆகிய மூலவகைகள் இருபத்தொன்றாய் விளங்குமென்றறிக.

மூலரோகக்குணங்கள்.

ஆசனத்தின் சுற்றிலும் கிழங்குமுளைகளைப் போன்றிருத்தலும், மலஞ்சிக்கலும், மலபாதைக்குப் போகுங்கால் உள்ளங்கால் தொடங்கி உச்சிபரியந்தம் வலித்தலும், அடித்தொடைச்சதைநோதலும், உடம்புநோதலும், இளைத்தலும், நாபியின்கீழ் வாய்வுதங்கி அடிவயிறுநோதலும், அதிகசத்தத்தோடு வாயுபேசலும் ஆகிய இத்தகையகுணங்களைத் தருமாம் மகாகொடிய மூலரோகமெனக்கொள்க.

நீர்மூலம் வருதல்.

பித்தமும், வாதமும் ஒருங்குசேர்ந்து வால்நீண்டான்பரவையின் வாலைப்போலும், வேங்கையின்வாலைப்போலுமாடி நடக்கில் தொப்பூழ்மிகவலித்தும் அடிவயிற்றைச்சுழட்டிப் பொருமியும், மலம்வாரண்டும், வாய்நீரூறியும், மலம்வருதல்போல் இறுக்கியும், அடிக்கடி மலம் நீராய்ப்போதலுமாகிய குணங்களைத்தருமாம் நீர்மூலமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

வேப்பெண்ணெயில்-உக-விசை உருக்கிச்சாய்த்த சிறுகண்ணாகம் பலம்-க-க்கு விளாங்கனிப்பிரமாணம் வில்வஇலையையரைத்துக்கவசித்து ஏழுசீலைசெய்து வராகபுடமிடபற்பமாம். சுக்குச்சூரணமும், பனைவெல்லமும் சமன்சேர்த்து கழல்பருப்பு பிரமாணம் உண்டைக்குள் இந்த நாகபற்பம்பணவெடைவைத்து ஏழுவேளை உண்ணவும், இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

மேற்படி சுத்திசெய்தநாகம் பலம்-உ, நாட்டுசர்க்கரையில்அரைத்தெடுத்த இரசம்-உ, இவ்விரண்டும் தொந்தித்து ஐந்தாங்காச்சல் வெடியுப்பு பலம்-க, சேர்த்து உத்தாமணிச்சாற்றால் நாலுஜாமமாட்டி வில்லைசெய்து ஓட்டில்வைத்து ஓடுமூடிசீலைசெய்து பத்தெருவில் புடம்போட்டெடுத்து குன்றியிடை தேத்தான்கொட்டைச் சூரணத்தில் வைத்துண்ணவும், கடும்பத்தியம்.

ங - வது மருந்து.

இலுப்பெண்ணெயில்-எ-விசை உருக்கிச்சாய்த்த வெள்வங்கம் பலம்-க, சர்க்கரையில் சுத்திசெய்த இரசம பலம்-க, சலாசத்து பலம் உ, இவைகளை சுண்ணாநீரால் நாற்சாமமாட்டி வில்லைசெய்து ஓட்டில்

வைத்து ஓடுமூடி-௩-சீலைசெய்து-௰-எருவில் புடம்-௧, உ௫-எருவில் புடம்-௧, ௫௰-எருவில் புடம்-௧ இப்படி சுண்ணநீரால் அரைத்தரைத் துப் புடமிட்டு-௩ குன்றிவீதம் வெண்ணெயில் சாப்பிட நீர்மூலரோ கம் நீங்குமென்றறிக, இச்சாபத்தியம்.

### முளைமூலம் வருதல்.

வாதநாடியானது பித்தத்திலுறைந்து குரங்கின்வாலைப்போன்று தாவிடக்கில் ஆசனத்திற்கடுப்பும், ஆசனம்தடித்து எரிச்சலும், அடி வயிறு கல்லுபோன்றும், ஆசனம் சுருங்கியும், தினவுண்டாகியும், இர த்தம் பீறிட்டும், வயிற்றில் இரைச்சலும், ஏப்பமும், மலம்நிப்பிடித் துசறுகலும், அபானத்தில் முளைதோற்றலும் ஆகிய குணங்களோடு முளைமூலம் வந்தெய்ததென்றறிக.

### நிவர்த்தி மருந்து.

சிற்றாமணக்கெண்ணெ பலம்-௫௰, மெருகன்கிழங்கு ப ௫, கரு ணைக்கிழங்கு-ப-௫, இவைகளைத் துண்டுதுண்டுகளாக்கி ஷை எண்ணெ கொஞ்சம்விட்டு சிவக்கவதக்கி சங்கன்குப்பியிலை, நொச்சி, கொட்டை கரந்தை, முருங்கிலை, செருப்படை, வெள்ளைவெங்காயம், அத்திப பட்டை, பூவரசன்பட்டை, பூவரசுபழுப்புவகைக்குசார் படி-வ-௫ இவை களைச்சேர்த்து காச்சிவடித்து கருஞ்சீரகம், சாதிபத்திரி, வகைக்கு பலம்-௭, ஜாதிக்காய் ப-௧, பரங்கிசெக்கை ப-௧, சிவன்வேம்பு ப-௧ இவைகளைச் சூரணஞ்செய்திட்டுவேளைக்கு ப ௭, வீதம் எண்ணெ எ. நாள்கொடுத்து இரண்டுநாட்சென்றபின் முத்தெண்ணெயால் ஸ்நானஞ் செய்துவைக்கவும், இப்படி-௩-விசை கொடுக்கவும், இச்சாபத்தியம்.

### உ - வது மருந்து.

பிரண்டை, ஆமணக்குவேர், புளியன்வேர், நன்னாரி, கொடிவேலி, சிரகம், அக்கிராகாரம் இவைகளை சித்தாமணக்கெண்ணெயில் காச்சிவடித்து-எ-நாள் சாப்பிடவும், இச்சாபத்தியம்.

### ௩ - வது மருந்து.

வசம்பு, வாய்விளங்கம், சீரகம், சுக்கு, வெண்மிளகு, திப்பிலி, கோஷ்டம், கடுக்காய், ஓமம், சித்திரமூலம், கழற்சிவேர், அப்பைக் கிழங்கு வகைக்குப்பலம்-௧ இவைகளைச்சூரணித்து ஆவின்பாலில்பிட் டுவைத்து வெண்காரம், எவாச்சாரம், இந்துப்பு வகைக்கு விருக னெடை-௧, சேர்த்து ஆவினெய்யில் ஜாமமாட்டி கழற்சிக்காய்ப்பிரமா ணமுண்ணவும், முளைமூலரோகம் காணாதோடுமென்றறிக, இச்சாபத் தியம்.

### சீழ்மூலம் வருதல்.

வாதமுமையமுங்கலந்து எருமையைப்போலசைந்தசைந்து நடக்கில் குதங்கடுத்தும், எரிப்புதோன்றியும், தேகம் மஞ்சணித்தும், நடைகுறைந்தும், நீர்மஞ்சணித்தும், மாமிசங்கள்கறைந்தும், சீழும் ஜலமும் கலந்துவருதலுமாகிய குணங்களோடு சீழ்மூலரோகம் வந்தெய்தலென்றறிக.

### நிவர்த்தி மருந்து.

சுத்திசெய்தசூதம் விராகனெடை-க, செம்புபொடி வி-எ, கெந்தி வி-கூ, இந்துப்பு வி-ஒ இவைகளை எலுமிச்சம்பழச்சாற்றூல்-க ஜாமமாட்டி அபானதுவாரத்தில்-ங-நாள்-சு-வேளை உட்பூசவும்

### உ - வது மருந்து.

நெறிஞ்சில், வில்வம், சித்தாமுட்டி, பேராமுட்டி, பாதிரி, கொன்றை, முள்ளி, கண்டங்கத்திரி, நன்னரி, சுக்கு, சோம்பு வகைக்குப் பலம்-க, இவைகளை-உ-படி ஜலத்தில்போட்டு ஆழாக்குஜலமாகக்காச்சி வெண்ணெயிட்டு-சுய-நாள் சாப்பிடவும், பத்தியமில்லை.

### ங - வது மருந்து.

அதிவிடயம், பற்பாடகம், பரங்கிப்பட்டை; ஜாதிக்காய் இவைகள் வகைக்குபலம்-உ, வெள்ளாட்டுப்பால் படி-உ-விட்டு சுண்டக்காச்சி சூரணித்து பனைவெல்லம் பலம்-உ ஒ, போட்டு மெழுகாக இடித்து நெய்கலந்து புன்னைக்காயளவு உட்கொள்ள சீழ்மூலரோகம் அகன்றுபோமென்றறிக, பத்தியமில்லை.

### சுருக்குமூலம் வருதல்.

பித்தமும், ஐயமும் ஒருங்குசேர்ந்து காக்கையைப்போல் நடக்கில் ஆசனம் சுருங்கியும், பொருமலாயும், வலியும், இரத்தமும் ஜலமும் ஆசனவழியாயொழுகலும், ஆசனம்வெளுத்து அழலாய்த்தோற்றலும், சுருக்குசுருக்கெனப்பாதித்தலும், தேகமெலிதலுமாகிய குணங்களோடு சுருக்குமூலரோகம் வந்தெய்தமென்றறிக.

### நிவர்த்தி மருந்து.

பாலில்வேகவைத்தெடுத்த நெல்லிகெந்தகம் பலம் க, சற்சுண்ணம் பலம் க இவைகளிரண்டையும் பொடித்து ஓட்டில்வைத்து கரிநெருப்பைமேல்வைக்க எரிந்து சிட்டமாகும், அச்சிட்டத்தை எலுமிச்சம்பழச்சாற்றூலாட்டி ஒருபலம் கற்பூரசிலாசத்துக்கு கவசித்து ங-சிலைசெய்து-கரு-எருவில் புடம்போட பற்பமாகும் ஆகிய பற்பத்

தில் பனைவெல்லம் வெண்ணெயிற்கலந்து-உ௰-நாள் பொசிக்கவும், இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

தூதுவளைவேர், ஆவாரைவேர், அருகன்வேர், நன்னாரிவேர், இந்துகாய்நெல்லிவேர், பிரண்டைவேர், சித்தாமணக்கன்வேர், சுக்கு, சீரகம், திப்பிலி, ஏலரிசி, அதிமதுரம் இவைகளைச்சூரணித்து ஆவின்பாலில் பிட்டுவைத்து எடுத்துணர்த்தி திரிகடிப்பிரமாணம் சீனியிற்கலந்து-க-மாதம் உண்ணவும், பால்சேர்க்கவும், பத்தியமில்லை.

௩ - வது மருந்து.

பவழம்பலம்-க, வீரம் விரா-கவ, சடாமாஞ்சில் விரா-கால், மிளகு விரா-ரு, இவைகளைக் குமரிச்சாற்றால்-ச ஜாமமாட்டி வில்லைசெய்து ஓட்டில்வைத்து ஓடுமூடி-எ சீலைசெய்து-௰-விராட்டியில் புடம் ங, மறுபடியும் முன்சாற்றாலாட்டி-உ௰-எருவில் புடம் ச, ரு௰-எருவில் புடம்-க, ௱-எருவில் புடம்-க போட்டெடுத்து பனைவெல்லம் தேனிற்கொள்ள சுருக்குமூலரோகம்விட்டோடிப்போம் கடும்பத்தியம், பவழத்தை எலுமிச்சம்பழச்சாற்றால் சுத்திசெய்யவும், வீரத்தை மிளகுநீரில் தோளாந்தரமாய்க்கட்டி-க-ஜாமம் எரிக்கவும்.

புறமூலம் வருதல்.

வாதமும், பித்தமும்சேர்ந்து சோழிநடைநடக்கில் ஆசனத்தின் மேற்புறத்தில் சிறுசிரங்குகளும், சொரியும், ஆசனத்திற் பிளவுபோலும், திமிர்த்தும், நமைச்சலும், கடுப்பும், சீழும்ஆகிய குணங்களைத் தருமாம் புறமூலரோகமென்றறிக.

நிவர்த்திமருந்து.

தூதுவேளைமூலம், மருளங்கிழங்கு, கருணைமூலம், பிரண்டைமூலம், நல்லாரைவேர், காட்டுக்கருணைமூலம், மிளகாலைமூலம், வெள்ளறுகுமூலம், நீர்முள்ளிமூலம், வகைக்குப்பலம்-க இவைகளையுணர்த்திச் சூரணித்து பாலில்சுத்திசெய்து திரிகடிப்பிரமாணம் கோவெண்ணெயில்-௰-நாள் கொள்ளவும், பத்தியமில்லை அன்றியும்ஆசனத்தில் ஆப்பைக்கோவையிலையை யரைத்துக்கட்டவும்.

உ - வது மருந்து.

நாகத்தை இலுப்பைநெய்யில்-எ விசை உருக்கிச் சாய்த்து ஒருபலங்கட்டியை ஓட்டில்வைத்துருக்கி சிறுதுத்திவேரால் கிளறிக்கிளறித்தேய்க்க பற்பமாகும், அப்பற்பத்தைக் கற்றாழைச்சோற்றில்பனைவெல்லம் கலந்து-உ௰-நாள் கொடுக்கவும், இச்சாபத்தியம்.

## ௩-வது மருந்து.

வேப்பெண்ணெயில்-எ விசைஉருக்கிச்சாய்த்த கருவங்கம்பலம்-௧, நாட்டுச்சக்கரையில் சுத்திசெய்த இரசம்-பலம்-௧ இவைகளைத்தொங் கித்து சவ்வுநீக்கின சிற்றண்டத்தோல்பலம்-௩-சேர்த்துவெள்ளெருக் கன்பாலாலாட்டி சிறுவில்லைகளாக்கி மூசையில்போட்டு ஓம்மூடி-எ-சீலைசெய்து ஒருஜாமம் உலையில்வைத்தூத சுண்ணமாகும், அச்சுண் ணத்தை-௫-அரிசி பிரமாணம் கோவெண்ணெயிற்கலந்த-எ-நாள்உண் ண புறமூலரோகம்விட்டகலுமென்றறிக, கடும்பத்தியம்.

## மூலவகைகள் இருபத்தொன்றுக்கும் பொது அவுஷதங்கள்.

ஒருபடி ஆநெய்யில் ஈருள்ளிச்சார்-௪-படிவிட்டு ஆவின்பால் படிகலந்து அதிமதுரம் ஒருபலமரைத்துப்போட்டு சலமில்லாமல் சுண்டக்காச்சி மெழுகுபதமாய்வாங்கியபின் உச்சிக்கரண்டிவீதம் அந் திசந்தி-௨௰-நாளுண்ணவும் இச்சாபத்தியம்.

## ௨-வது மருந்து.

நாயுருவிசமூலம் பலம்-௰௪-இடித்துப் பாண்டத்திட்டு கையாந் தகரைச்சார்படி-௧, ஆவிநெய்படி-௨, ஒன்ருய்க்கலந்ததில் சித்திரமூல ம்வேர்பட்டை, சிவதைவேர், மூக்குவெட்டி சாணிப்பாலில்சுத்திசெய் த சேங்கொட்டை, காவல்பட்டை, சுக்கு, மிளகு, திப்பிலி, முன்னை வேர், தான்றிக்காய், நெல்லிக்காய், கடுக்காய், முசுட்டைவேர், வெட் டிவேர், புங்கம்பட்டை, உப்பு, புளி,மிளகாயில், கொதிக்கவைத்தெடு த்தவாளம், இந்துப்பு, சிறுகாஞ்சோரி, கஸ்தூரிமஞ்சள், புளியரணை, பிரண்டை, மருட்கிழங்கு, நன்னாரிவேர் வகைக்குப்பலம் ௭ இவை களை இடித்துப் பாலிலரைத்து ஒக்கச்சேர்த்து இளந்தீயாக-௪-நாள் எரித்துப் பரமாய்க்காச்சி உச்சிக்கரண்டிவீதம் நெய்யை ௨௰-நாள்அந் திசந்திகொள்ளவும், இச்சாபத்தியம.

## ௩-வது மருந்து.

சுக்கு, வெண்மிளகு, திப்பிலி, சீரகம், ஏலரிசி, அதிமதுரம், கோஷ்டம், வாய்விளங்கம், கடுகுரோகணி, மாசிக்காய், சோம்பு, நன் னாரி, வில்வவோடு, விளாங்கனிஓடு, நெல்லிவேர், பேய்ப்பீர்க்கு, சிறு காஞ்சோரி, திரிபலை, சிவதைவேர், சித்தாமுட்டி, அறுகன்வேர், கட் டுக்கொடிவேர், வகைக்குப்பலம-௧ இவைகளைப் பொடித்து-௨௰-படி ஜலம்விட்டு-௫-படி ஜலமாகச்சுண்டக்காச்சி, ஆரை ஆழாக்கு வீதம்,

சீனிபால்கூட்டி சாப்பிடவும்-ரு-படி ஜலம்ஆகும்வரை சுடவைத்து சுடவைத்து சாப்பிடவும், பத்தியமில்லை.

௪ - வது மருந்து.

நன்னாரி, மூக்காவேளை, சீரா, செங்கழுநீர், ஓரிலைத்தாமரை; வகைக்குப்பலம்-௩, மிளகு, திப்பிலி, சீரகம், அக்கிராகாரம், கருஞ்சீரகம், ஏலரிசி, லவங்கம், கொத்துமல்லி, குராசானிஓமம், வகைக்கு விருகனெடை-ரு, ஜாதிக்காய், கிராம்பு வகைக்கு விருகனெடை-க இவைகளை இடித்துச்சூரணித்து ஆவின்பாலில்பிட்டுவைத்து உணர்த்தி திரிகடிப்பிரமாணம் சீனிகூட்டி இருவேளை இருபதுநாட்கொள்ளவும், பத்தியமில்லை.

ரு - வது மருந்து.

நிலப்பனை, புளியமடல், வெருகங்கிழங்கு, மணிப்பிரண்டை, அமுக்கரா, அப்புகோவை, வகைக்குப்பலம்-ரு, சித்திரமூலம்,மிளகு, திப்பிலி, சீரகம், ஏலம், தேவதாரம், தேசாவரம், கடுகுரோகணி, அதிவிடயம், இந்துப்பு, கல்லுப்பு, வெடியுப்பு, வளையலுப்பு, கருஞ்சீரகம், அதிமதுரம், கோஷ்டம், வசம்பு, ஓமம் வகைக்கு விருகனெடை-உ, ஜாதிபத்திரி விருகனெடை-க, வெள்ளைப்பூண்டு பலம்-க இவைகளை இடித்துச் சூரணஞ் செய்துக்கொண்டு வேளையொன்றுக்கு திரிகடிப்பிரமாணம் இருவேளை அரைமண்டலம்கொள்ளவும்.

சு - வது மருந்து.

கோநெய் படி-௧, தென்னம்பூச்சாறு படி-௨ ஒன்றுகூட்டிஅதில் மாதுளத்தோடு, காட்டுக்கருணை, கரிக்கருணை, நிலக்கருணை, பேய்க்கருணை, செங்கத்தாரிபட்டை, ஆவாரம்வேர்பட்டை, புளியன்விதைத்தோல், ஆவாரையரிசி, களிப்பாக்கு வகைக்குப்பலம்-௧, கோஷ்டம், அதிமதுரம், விளாம்பிசின், நற்சீரகம், வால்மிளகு, காசுகட்டி வகைக்குவிரு சு, ஏலம்விருகனெடை-க, லவங்கப்பட்டை பலம்-க கிராம்பு, ஜாதிக்காய், வெண்மிளகு, வகைக்குவிருகனெடை-உ, ஜாதிபத்திரி விருகனெடை-க, இவைகளை ஆவின்பாலி லறைத்துப்போட்டு, சீனிபலம்-க, ஒன்றாய்க்கலந்து லேகியஞ்செய்து நாழி ஒன்றுக்கு கொட்டைப்பாக்களவு இருவேளை எட்டுநாட்கொள்ளவும்.

எ - வது மருந்து.

கையாந்தகரை, பொடுதலை, கீழ்க்காய்நெல்லி, பொன்னாங்கண்ணி, வீழி, மணத்தக்காளி, கொவ்வைமுதலிய தழைகளின்சாறு

வகைக்குப்படி-வ, சித்தாமணக்கெண்ணெபடி-க, இளநீர்படி ௨, எலு மிச்சம்பழச்சாறுபடி-ஜ, ஆவின்பால்படி-வ, சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலரிசி, அதிமதுரம், கடுகுரோகணி, ஜாதிக்காய், கிராம்பு, லவங்கப் பட்டை, கோஷ்டம், சீரகம், வெண்மிளகு, கடுக்காய், சித்திரமூலம், சித்தாமுட்டி, பேராமுட்டி வகைக்குப்பலம்-௨, இந்துப்பு, வளைய லுப்பு, வெடியுப்பு, கரியுப்பு, கல்லுப்பு, வகைக்கு விருகனெடை-க௨ இவைகளைப் பொடித்துப்போட்டு நீர்வற்றக்காச்சி வடித்துக்கொண்டு பின்படிகாரத்தைத் துளைத்து பூரம்வைத்து ஷை காரத்தூள்கொட்டி குடுவைக்குள்ளிட்டு மேல்மூடி-௩-சீலைசெய்து-ரு-எருவில் புடம்போ ட்டு பற்பத்தை ஒருவிருகனெடை ஷை எண்ணெயிற்கலந்து உச்சிக் கரண்டிவீதம்-௨ய-நாள் இருபோது உட்கொள்ள சகல மூலரோகங் களும் வீடுவிட்டுக் காடுறையுமென்றறிக, இச்சாபத்தியம்.

மற்றைய மூலரோகங்களின்வரலாற்றையும், நாடிகளினடைகளை யும், அவுஷதபாகங்களையும், அதற்குற்ற பத்தியபாகங்களையும், சுத்தி செய்யும்விவரங்களையும் முறைமுறையே முதற்பாகம், ௨-ம்-பாகம், ௩-ம்-பாகமாக அச்சிட்டுவருவோமாக.

இனி காசரோகவிவரங்களையும், நாடிகளினடைகளையும், நிவர்த் திக்கு மவுஷதபாகங்களையும், சிலதுசொல்வோமாக.

## காசரோக உற்பத்தி.



நாடோறுஞ்சையோகித்தலாலும், பற்பலஸ்திரீகளிட புணர்ச்சி யாலும், அதிகமாமிசபங்கை புசித்தலாலும், அதிகவெய்யலில் திரிவ தாலும், திரேகத்துக் கேற்றுக்கொள்ளாப்பதார்த்தங்களைப் புசித்தலா லும், துக்கசாகரத்தில்மனதை ஓட்டியதாலும், அதிகாமமானோர் பிந் தைவிடாமல் இருந்ததாலும், தேவதைகளுக்குப் பிரார்த்தனைசெய் ததை நிறைவேற்றாததாலும், பிறர்பொருளை அபகரித்ததாலும், ஒரு வர்மேல் நிந்தைவார்த்தைக்கூறியதாலும், செய்நன்றிமறந்ததாலும், கடன்கொடுத்தோரை அடித்தலாலும், ஒருவர்பசிக்க உண்டதாலும், வஞ்சகபனத்தினாலும், பதிவிரதாசிரோன்மணியைக் கற்பழித்தா லும், சிநேகன்மனைவியைப் புணர்ந்ததாலும், ஆசான்மொழி கடந்த தாலும், பெரியோர்களைமதிக்காதுநிந்தைசெய்ததாலும், தேவதாதூஷ ணைசெய்ததாலும், மதபேதம்பேசினதாலும் மகாகொடுமைவாய்ந்த காசரோகம் வந்தெய்ததென்றறிக.

காசரோகத் தொகைகள்.

வாதகாசம், பித்தகாசம், சேத்துமகாசம், வாதபித்தகாசம், பித்தசேத்துமகாசம், மந்தாரகாசம், சுவாசகாசம், சயகாசம், சுடர்காசம், பீநிசகாசம், நாதகாசம், தொந்தகாசம் ஆகிய காசரோகவகைகள் பன்னிரண்டாக வகுத்துரைத்தனரென்றறிக.

வாதகாசம் வருதல்

வாதநாடியானது கிருமியைப்போல்நடக்கில் நெஞ்சுணர்ந்தும், நெஞ்சில் தினவுண்டாகியும், செவிகளில் இறைச்சலைத்தந்தும், மேற்சுவாசம்வாங்கியும், உந்திக்கமலத்தில் அதிகசதைவளர்ந்தும், நடுமுதுகுநொந்தும், கில்கள்விட்டும், இருமல் அதிகப்பட்டும், கோழைமுறுவந்தும் ஆகியகுணங்களோடுவருமாம், வாதகாசரோகமென்றறிக.

நிவர்த்திமருந்து.

வெடியுப்பு பலம்-௫, புளி பலம்-௫, ஒன்றுசேர்த்துகல்லுரலிலிட்டு ஜாடிபில்லைசெய்து அடுப்பில்தீயிட்டெரிக்க எரிந்துகரியாகும், அதைப்பொடித்துப் பீங்கானில்வைத்துமேல்மூடிகுழிவெட்டிப்புதைத்து மூன்றுநாட்சென்றெடுக்க செயநீராகும், இப்படியேநாடோறும் காற்றுடாமல் புதைத்துபுதைத்து ஒருபக்கமாகசிற்கும் ஜெயநீரைஎடுத்துக்கொண்டு-௧-பலம் தாளகத்தை செயநீரில் தோய்த்து தோய்த்து நெருப்பில்-௨௧-விசைகாட்டி ஷைசெயநீரால் தாளகத்தை நாற்சாமமாட்டி இலேசாகவில்லைதட்டி ரவியில்காய்ந்தபின் ஓட்டில் * சிப்பிச்சுண்ணம்பரப்பி ஷை தாளகம்வைத்து அதன்மேல் ஷை சுண்ணங்கொட்டி ஓடுமூடி-௭-சீலைமண் வலுக்கச்செய்து-௰-எருவில் புடம்-௧, மேற்படிநீராலாட்டி முன்போல-௰௫-எருவில் புடம்-௧, ௨௰-எருவில் புடம்-௧-போட தவளநிறம்போன்றபற்பமாம், தேனில்பணவெடைபற்பம் கால்மண்டலம் சாப்பிடவும், கடும்பத்தியம்.

௨ - வது மருந்து.

ஒருபலம் நற்பவழத்தை நிம்பழச்சாற்றிலும், முசுமுசுக்கைச்சாற்றிலும்-௩-நாளூரலைவத்துப் பின்முசல்இரத்தத்தால்-௬-ஜாமமாட்டி இலேசாகவில்லைசெய்து-௰-எருவில் புடம்-௧, முன்போலச்செய்து ௨௫-எருவில் புடம்-௧, ௫௰-எருவில் புடம்-௧ போடபற்பமாம், அன்

---

* சிப்பிச்சுண்ணமாவது:—எரிபிண்டமென்றும், கைகூப்பியென்றும் வழங்கும் ஓட்டைகுடுவையிலிட்டு மேல்மூடி உலையில்வைத்து ஒருசாமம்ஊதச் சுண்ணமாம்.

சிங்கியென்றுவழங்கும் புள்ளிமான்கொம்பை மூந்திசுட்டெடுத்து பலம்கொம்பை கல்வத்தில் பொடித்து கழுந்சியிலே ரசத்தால்-௨-ாமம், நச்சுயிலேச்சாற்றால்-௩-ஜாமம், சிறுதுத்தியிலேச் சாற்றால்-௪-ாமமாட்டி வில்லேசெய்து-௰-எருவில் புடம்போட்டு மேற்கூறிய வழபற்பம் குன்றியெடையும், சிங்கிபற்பம் பணவெடையுங்கலந்து தனில்-௰-நாட்கொள்ளவும், இச்சாபத்தியம்

௩ - வது மருந்து.

ஒருபலம் கருவங்கத்தை வேப்பெண்ணெயில்-௨௧-விசை உருக்கிச்சாய்த்து வில்லேதட்டி பச்சைகெஞ்சாயிலேயை விளாங்காய்ப்பிரமாணமறைத்து ஷை வங்கத்திற்கு கவசித்து,ஒருமுழம் வேப்பங்கட்டையைத்துளைந்து அதனுள்கவசித்த மருந்தைவைத்து வேம்பின்கொம்பாலே தமரடைத்து-எ சீலேவலுக்கச்செய்து கெசபுடம்போடப் பற்பமாகும், குன்றிஎடை தேனிற்கலந்து எ-நாளிருபோதுசாப்பிட வாதநாசரோகம் விட்டோடிப்போமென்றறிக, கடும்பத்தியம்.

பித்தகாசம் வருதல்.

பித்தநாடியானது மந்நைநுயைப்போன் றுல்லாசமாகநடக்கில், இருமல், பிரட்டல், நாவினிப்பு, சத்தியென்னும்வாந்தி, சிலவேளை நாவுவர்த்தல், குரள்கம்மல், வாயில் இரத்தம்வீழல், தேகமிளைத்தல், புளியேப்பம்விடல், தீபனக்குறைவு, ஆகாரஞ்செல்லாமை, சைகாலசதி, சோம்பல், ஆயாசம், மூர்ச்சை, தலைவலி, உடம்புவலி, மலச்சிக்கல், நித்திரைபங்கம், நாவரட்சி, கோபித்தல், சிலவேளைசந்தோஷித்தல், துக்கித்தல், சிலவேளை விரத்தனம், எழுந்துஓடல், உதடுவாளல், ஆடல் பாடலாகிய குணங்களோடு பித்தகாசரோகம் வருமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

தேத்தான்கொட்டைடலம்-௫, சுக்கு, மிளகு, திப்பிலி,கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், சிற்றரத்தை, சீரகம், வகைக்குப்பலம்-௧, சூரணித்து ஆவின்பாலில்பிட்டுசெய்து சீனிபலம்-௪, ஆவின்பால் படி-௧ ஒன்றாய்க்கலந்து பாகுசெய்து ஷைசூரணத்தைக்கொட்டிக்கிளறி பக்குவமாகுஞ்சமயத்தில் ஆவிநெய்படிகலந்துக்கிண்டி இறக்கி தேன் பலம்-௫-விட்டு சுண்டக்காயளவு லேகியஞ்செய்து அதில் குன்றியிடை கீழ்க்குறித்த வெள்ளிபற்பம்வைத்துண்ணவும்.

வெள்ளிச்சுண்ணம்.

ஒருரூபாயெடை சொக்கவெள்ளியை மகிழம்பூச் சாற்றில் எ விசை உருக்கிச்சாய்த்துப் பொடித்து சிற்றண்டஓடுபலம்-௨-சேர்த்து

ஷை சாற்றால் ௪-ஜாமமும், கற்சுண்ணநீரால்-௪-ஜாமமாட்டி, சிறுவில்லைகளாக்கி மூசையில்வைத்து மேல்மூடி-எ-சீலைவலுக்கச்செய்து இரட்டைதுருத்திகொண்டு க-ஜாமம் உலையில்வைத்தூத சுண்ணமாகும், இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

முத்துபலம் க, பவழம்பலம்-க, சிங்கிபலம் க, கற்பூரசிலாசத்து பலம் க, கல்மதம் பலம்-க இவைகளை நிம்பழச்சாற்றிலூரப்போட்டு மூன்றுநாளெடுத்துக்கல்வத்திலிட்டு கையாந்தகரைச்சாற்றில்-உ-ஜாமமாட்டி-ய-எருவில் புடம்-க, குப்பைமேனிச் சாற்றில்-உய-எருவில் புடம்-க, பொடுதலைச்சாற்றில்-உரு-எருவில்புடம்-க, பொன்னாங்கண்ணிச்சாற்றில்-௩ய-எருவில்புடம்-க, முசுமுசுக்கைச்சாற்றில்-௩ரு-எருவில் புடம்-க போட்டு ரோகச்சூரணத்தில்பணவெடைவைத்துக்கொடுக்கவும், பத்தியமில்லை.

௩ - வது மருந்து.

எருமைக்கொம்பு கஸ்தூரிபலம்-ரு, வெள்ளாட்டுக் கோமயத்தில் ௯-நாள் ஊரப்போட்டுப் பின்கறுஊமத்தன்இலை-௪-விளாங்காய்ப்பிரமாணம் அரைத்துக்கவசித்து சீலைசெய்து-ள-எருவில் புடம்-க, மறுபடியும் கவசநீக்கி, முன்போல்-உள-எருவில்புடம்-க-போட பற்பமாகும், இதில்பணவெடையும் மேற்கூறியபவழபற்பத்தில் பணவெடையுங்கலந்து திரிகடுகுசூரணத்தில் ஒருமண்டலம்தாக்க பித்தகாசரோகம் நீங்கிப்போமென்றறிக.

ஐயகாசம் வருதல்.

ஐயாதியானது சேவல்சிய்க்கும் வாறுபோன்று அதிநடையுள தாயில் தாழ்ந்தஇருமல், இரைப்பு, இளைப்பு, ஈளை, மதமூச்சு, அடிவயிறு கற்போன்றிருத்தல், பசியின்மை, உடம்புவற்றல், சுரம்வருதல், தியங்கல், வாந்தி, சிறுகடுப்பு, உடம்பெங்கும் உஷ்ணகாந்தலாகிய குணங்களோடு ஐயகாசரோகம்வருமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

நாட்டுச்சர்க்கரையில் சுத்திசெய்த இரசம்பலம்-௭, நல்லெண்ணை, நிம்பழச்சார், கொவ்வைச்சார், கொடிவேலிச்சார், வேளைச்சாறிவைகளில் வகைக்கு-எ விசையாக உருக்கிச்சாய்த்தகருவங்கம்பலம்-௪, தொந்தித்து அயச்சட்டியிலிட்டு உருகும்போது ஆவாரபஞ்சாங்கம், வேளைவேர், துத்திவேர்ப்பொடியைத் தூவிதூவி வெள்ளெருக்கன்வேரால்-௪-ஜாமம் கிளறிக்கிளறிப் பின்வெள்ளெருக்கம்பாலலாட்

டி கோழிபுடம்போட்டு பணவெடை தேனில் அல்லது நெய்யில்கொடுக்கவும், கடும்பத்தியம்.

௨ - வது மருந்து.

மேனிச்சார்படி-௨, பழங்காடிபடி ௨, வெடியுப்புபலம்-௫. ஒன்றாய்ச்சேர்த்துக்கடைந்ததில் கொம்புக்கள்ளிப்பாலில்-௪-ஜாமம் சுருக்குகொடுத்துப் பின்செங்நாயுருவிச்சாம்பலில்வைத்து-௰௨-ஜாமம் எரித்ததாளகம்-௨-பலத்தைத் தோலாந்தரமாகக்கட்டி தண்ணீர் வற்றுமட்டுமெரித்துப் பின்வெடியுப்பு ஜெயநீரில் ௪-ஜாமம் சுருக்குகொடுத்து பத்துவிசைதீட்சைசெய்த பூநீறுவிருகனெடை-௨-சேர்த்து அப்பைக்கிழங்குசாற்றில்-அ-ஜாமமறைத்து சிறுவில்லைகளாக்கி காய்ந்தபின் சட்டியில் கற்சுண்ணம்பரப்பி ஷை தாளகத்தைவைத்து மேலும் கற்சுண்ணங்கொட்டிமேல்சட்டிமூடி-எ-சீலைவலுக்கச்செய்து-௪-ஜாமம்காடாக்கினியாகஎரிக்க தவளநிறம்போன்ற பற்பமாகும்-௨-அரிசிப்பிரமாணம் தேனில்-௰-நாள் இருவேளைசாப்பிடவும், சுட்டபுளி வறுத்தவுப்பு கூட்டவும்.

௩ - வது மருந்து.

தேத்தான்கொட்டை பலம்-௫, சித்திரமூலம், மிளகு, ஏலரிசி, திப்பிலி, லவங்கம், கார்போகவித்து, அதிமதுரம், கோஷ்டம், தான்றிக்காய் நெல்லிக்காய், ஏலம், வால்மிளகு, சண்பகப்பூ, செங்கழுநீர், நற்சீரகம், சிறுதேக்கு, கோரைக்கிழங்கு, சாதிக்காய், இருசீரகம், பூலா, சாதிபத்திரி, லவங்கப்பட்டை, வகைக்குவிருகனெடை இவைகளைச்சூரணித்து ஆவின்பாலில்பிட்டுவைத்து பின்கலியாணிபூசனிக்காய், சிறுகீரை, பொன்னாங்கண்ணி, பொடுதலை, கையாந்தகரைசாறு வகைக்குபடி அரைக்கால்,ஆவின்பால்படி-௨,பனைவெல்லம் வீசை ௨-சேர்த்து பாகுசெய்து ஷை சூரணத்தைக்கொட்டிக்கிண்டி ஆவினெய்வீசை-௨, சேர்த்துக்கிளறி இரக்கி தேன்பலம்-௫ விட்டு கொட்டைப்பாக்களவுதிரட்டி இந்நூலிற்கூறியபடி பவழபற்பம் காசெடைவைத்து இருவேளை உட்கொள்ளவும், அன்றி-அ-நாளைக்கோர்விசை அடியிற்கூறிய தயிலத்தை ஸ்நாநஞ்செய்யவும்.

தயிலம்.

கையாந்தகரை, பொன்னாங்கண்ணி, கொடிவேலி, அருகன்சாறு வகைக்குப்படி-௨, எள்ளெண்ணெபடி-௨ சேர்த்து அதிமதுரம்,கோஷ்டம், ஏலம், குராசானிஓமம், பூலா, கஸ்தூரிமஞ்சள், சடாமாஞ்சில், ஜாதிபத்திரி, ஜாதிக்காய், லவங்கப்பத்திரி, லவங்கப்பட்டை, சுக்கு,

மிளகு, திப்பிலி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், பூஞ்சாந்து, சோம்பு, வால்மிளகு, கார்போகவித்து, சந்தனத்தூள், வெட்டிவேர், விலாமிச்சை, அருகன்வேர், கோரைக்கிழங்கு, வகைக்குப்பலம்-க, பொடித்துப்போட்டு நீர்வற்றக்காச்சி முழுகிவர ஐயகாசரோகம்விட்டோடிப்போமென்றறிக, இச்சாபத்தியம்.

சுவாசகாசம்வருதல்.

வாதநாடியும் பித்தநாடியும் ஒருங்குசேர்ந்து ஆமையைப்போல் மெள்ளஊரிநடக்கில் வயிறுஇரைச்சல்,அன்னஞ்செரியாமை,கோழை கட்டல், இருமல், நாசிவரட்டல், குரல்கம்மல், முதுகெலும்பு எரிச்சல், மேற்சுவாசம், படுக்கைபொருந்தாமை, தேகவாட்டமாகிய குணங்களோடு சுவாசகாசரோகம் வருமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

பேய்ப்புடல், பேய்ப்பீர்க்கு, நெரிஞ்சி,நீர்முள்ளிவித்து, சீரகம், சந்தனம், சாம்பிராணி, பச்சைகற்பூரம், கோரோசனை, கலைக்கொம்பு பற்பம், நெல்லிக்காய்மிளகு, திப்பிலிவகைக்குப்பலம்-க சூரணித்து, செவ்விளநீரில்ஆட்டி குன்றியளவுகுளிகைகட்டி மாத்திரைஒன்றை சுக்குச்சூரணத்தில்வைத்து மண்டலம்புசித்து அடியிற்சொல்லியதயிலத்தை ஸ்நாநஞ்செய்யவும்.

தயிலம்.

அகிற்கட்டை, அறுகங்கட்டை,வகைக்குவீசை-வ, உ-படிஜலம் விட்டு-ஐ படிஜலமாகஇறக்கி ஒருவீசைஎண்ணெயிற்கலந்து நீர்வற்றக் காச்சி-அ-நாளைக்கொருவிசை ஸ்நாநஞ்செய்துவரவும், இச்சாபத்தியம் முழுகுநாள் மருந்தைநீக்கவும்.

உ - வது மருந்து.

நான்குவிரற்கடைப்பிரமாணம் அகலமாயும், ஓலைகனமாயுமுள்ளதைப்போல் கருவங்கத்தை தகடதாக்கி க-பலம் படிகாரத்தை கேசரிநீராலாட்டி தகட்டில்-ம-விசைபூசிபூசி குழிகெல்லி-ம உ-படி ஜலம் கொள்ளும்படியானபாண்டம்வைத்து அப்பாண்டத்தில் உஐ படிபுளியம்பாணைகொட்டி அதை வங்கத்தகடுவைத்துமேலும்முன்போல-உஐ படி புளியம்பாணைவைத்து பாண்டத்தில்தீவைக்க எரிந்துகரியாகும், அதற்குள்ளிருக்கும் வங்கத்தைக்கல்வத்திலிட்டு-வ-பலம் ரசம் தொரத்துப் பின்சிற்றண்டவோடுபலம்-௯-சேர்த்து வெள்ளெருக்கன்பாலால்-ச ஜாமமாட்டி வில்லைசெய்து ஓட்டில்வைத்து ஓடுமூடி-எ-சீலை

வலுக்கச்செய்து-௯௰-எருவில் புடம்போடநீறும், நீற்றியபற்பத்தை குன்றியிடை கோவெண்ணெயில் கால்மண்டலம் இருவேளை சாப்பிடவும், கடும்பத்தியம், கருவங்கத்தை வேப்பெண்ணெயில்-௨௧-விசை உருக்கிச்சாய்க்க சுத்தியாம்.

௩ - வது மருந்து.

ஆவின்பாலில்-௩-நாளூரப்போட்ட தாளகம்பலம்-௧, படிகாரம் பலம்-௨, சலாசத்துபலம்-௳ இவைகளைக்கற்றாழஞ்சோற்றால்-௪-ஜாமமாட்டி சிறுவில்லைகளாக்கி ஓட்டில்வைத்து ஓடுமூடி-௭-சீலைவலுக்கச் செய்து-௰-எருவில்புடம்போட நீறும், நீற்றியபற்பத்தைதிரிகடுகுசூரணத்தில் பணவெடைவைத்து சீனிநெய்கலந்து கால்மண்டலம் இருவேளையுண்ண சுவாசகாசரோகம் நீங்குமென்றறிக, கடும்பத்தியம்.



தொந்தகாசரோகம் வருதல்.

மூன்றுநாடிகளும் ஒன்றுக்கொன்றுபேதித்து வாதம் அட்டைபோலும், பித்தம் அன்னம்போலும், ஐயம் ஆமைபோலும்நடக்கில், இரத்தங்கக்கல், வெதும்பல், எரிச்சல், குத்திகுத்தி இருமல், அரோசிகம், பேதி, படுக்கைபொருந்தாமை, உடம்பூதல், தேகம்கடுத்தல், கோழைகட்டல், எழுந்திராமை ஆகியகுணங்களோடு மகாகொடுமை வாய்ந்த தொந்தகாசரோகம் வருமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

வேம்பின்பட்டையைக் கொண்டுவந்து சிறுபிள்ளைகள்சிறுநீர்வார்த்திடித்துச்சாரபிழிந்து சிறுகண்ணகத்தை-௨௧-விசை உருக்கிச்சாய்த்துப்பின் ஒருபலம் எடுத்துக்கொண்டு அயக்கரண்டியிலுருக்கி கொஞ்சிவேரால் ஒருஜாமம்தேய்த்து பணவெடைக்கு கடுக்காய், திப்பிலி, கோஷ்டம், அதிமதுரம், கிராம்பு, ஜாதிக்காய், அக்கிராகாரம், அரத்தை வகைக்கு ஓரிடைதூக்கிச்சூரணித்ததில் திரிகடிப்பிரமாணங் கலந்து கால்மண்டலம் இருவேளைகொள்ளவும், கடும்பத்தியம்.

௨ - வது மருந்து.

இரும்பு விருகனெடை-௧, நாகம் விரு-௨, வெள்ளி விரு-௨, செம்பு விரு-௧, தங்கம் விரு-௨, காந்தம் விரு ௨, ஒன்றாயுருக்கிபூவரத்தால்ராவி கல்வத்திலிட்டு, இரசம் விரு-௫, கெந்தி விரு-௰, இந்துப்பு விரு-௪, அன்னபேதி விரு-௫-சேர்த்து பொற்றலைக்கையாந்தகரைச்சாற்றால்-௨௪-ஜாமமாட்டி உணர்த்திப்பொடித்து காசிகுப்பி

யில் பாதிநிரப்பி கல்காற்குபோட்டு-எ சீலை வலுக்கச்செய்து சட்டியில்-சு-விரற்கடை மணல்கொட்டி குப்பிவைத்து கழுத்தளவு மணல் போட்டு மேல்சட்டிமூடி சட்டிவாய்சீலை வலுக்கச்செய்து தீபாக்கினியாய்-உ-ஜாமம் கமலாக்கினியாய்-உ-ஜாமம் காடாக்கினியாய-சு-ஜாம மெரிக்கச் செந்தூரமாம் ஆகிய செந்தூரத்தில் பணவெடை திரிகடுகு சூரணத்திற்கலந்துண்ணவும். கடும்பத்தியம், அன்றி மேற்கூறியசரக்கில் அயப்பொடியை சம்பழச்சாற்றில்-ரு-நாளூரவைக்கவும், நாகத்தை இலைக்கள்ளிப்பாலில்-எ-விசை உருக்கிச்சாய்க்கவும், வெள்ளியை மகிழம்பூச்சாற்றில்-எ-விசை உருக்கிச்சாய்க்கவும், செம்பைகேசரிலைத்தியைப்பூசி-ய-புடம்போடவும், காந்தத்தை நல்வேளைச்சாற்றில்-ரு-நாளூரப்போடவும், தங்கத்துக்கு காவிக்கல்லை நிம்பழச்சாற்றிலாட்டிப் பூசிப்பூசி ய-புடம்போடவும், இரசத்தை நாட்டுச்சர்க்கரையில் அரைக்கவும், கெந்தகத்தைப்பாலில் ஒருமணிநேரம் ஊரப்போடவும், அன்னபேதியை ஆவின்கோமயத்தில்போட்டு காச்சவும், சுத்தியாம்.

ரு - வது மருந்து.

முருங்கைவேர், கல்லுப்பு, அன்னபேதி, காக்கணமூலி, பொன்னிமிளை ஆகிய இந்த ஐந்தையுஞ் சமனெடையாய்த்தூக்கி நிம்பழச்சாற்றால் ஒருசாமமாட்டிப் பின்கொடிவேலிச்சாற்றில்-உ-ஜாமமாட்டி விருகனெடை தாம்பரத்தகட்டிற்பொதிந்து சீலைசெய்து கெசபுடமிட செந்தூரிக்கும் ஆகிய செந்தூரத்தை திரிகடுகுசூரணத்தில் பணவெடைவைத்துண்ண மகாகொடிய தொந்தகாசரோகம் விடுவிட்டுக் காடுறையுமென்றறிக, இச்சாபத்தியம்.

சகலகாசரோகங்களுக்கும் பொதுஅவுஷதங்கள்.

தாளகம்பலம் க-க்கு ஐவிரலிச்சாறுபடி-க, பசளைச்சாறுபடி-க, எருக்கம்பால்படி-வ, இவைகளை ஒன்றுபடுத்தி சுருக்கிய்ந்து பின்படிகாரம்பலம்-உ-சேர்த்து எருக்கம்பாலாலாட்டிசிறுவில்லைகளாக்கிசுண்ணாம்புக்குள்கவசித்து சீலைசெய்து-ய-எருவில் புடம்போடச் சுண்ணமாம், பணவெடை தேனிற்கொள்ளவும், கடும்பத்தியம்.

உ-வது மருந்து.

மிருதார்சிங்கி, குஞ்சிபொரித்தஅண்டோடு, வெடியுப்பு இவைகளைச் சமனெடையாய்த்தூக்கி வெள்ளெருக்கம்பாலாலாட்டி சிறுவில்லைகளாக்கி மூசையில்வைத்து மேல்மூடிசீலைசெய்து ஒருசாமம் உலையில்வைத்தூதச் சுண்ணமாம், பணவெடை கோவெண்ணெயிற்கலந்து கால்மண்டல மிருவேளைகொள்ளவும், இச்சாபத்தியம்.

௩ - வது மருந்து.

ஒருபலம் பவழத்தை வெள்ளெருக்கம்பாலில்-௨-ஜாமமாட்டி-௰-எருவில் புடம்போட்டு பணவெடைவெண்ணெயில்-௨௰-நாள் இருவேளைகொள்ளவும், இச்சாபத்தியம்.

௪ - வது மருந்து.

ஒருரூபாஎடைவெள்ளியை மகிழம்பூச்சாற்றில் ௭-விசை உருக்கிச்சாய்த்து ஓலைகளம் தகடதாக்கி வில்வப்பழத்தில்வைத்து கெஜபுடம்போட்டு பணவெடைசீரகச்சூரணத்திலுண்ணவும்,இச்சாபத்தியம்.

௫ - வது மருந்து.

நெல்லிகெந்தகம் விரு-௧, வீரம் விரு-௧,கற்பூரம் விரு-௧ இவைகளை எருக்கன்பாலாலாட்டி ஒருரூபாயெடை வெள்ளிக்குப் பூசிபூசி-௰-புடம்போட்டெடுத்து பொடியாய்ராவி குஞ்சுபொரித்தபுருவோடு இரட்டிசேர்த்து படிகாரம் ஒன்றுங்கூட்டி வெள்ளெருக்கம் பாலாலாட்டி சிறுவில்லைசெய்து மூசைக்குள்வைத்து ஒருஜாமம் உலையில்வைத்துதசுண்ணமாம், காசெடை சுக்குச்சூரணத்தில்வைத்துண்ணவும்.

௬ - வது மருந்து.

ஒருபலம்தாளகத்தைச் சுண்ணாம்பிலும், சிறுபிள்ளைகள் சிறுநீரிலும் வேகவைத்தெடுத்து, உத்தாமணிச்சாற்றில் நாலுஜாமம்; பனங்கள்ளில் நாலுஜாமம் சுருக்கிட்டெடுத்து படிகாரமிரட்டிசேர்த்து நிம்பழச்சாற்ருல்-௨-ஜாமமாட்டி சிறுவில்லைகளாக்கி சுண்ணாம்புபொதிந்து-௰-எருவில் புடம்போடநீறும் பணவெடை வெண்ணெயில்-௰-நாள் இருவேளைகொள்ளவும், இச்சாபத்தியம்.

௭ - வது மருந்து.

சிவப்புமுள்ளுக்கீரையைக் கொளுத்திச் சாம்பலாக்கி சிறுநீரில் கறைத்து சுண்டக்காச்சி உப்பெடுத்து விருகனெடைதங்கத்தகட்டிற்கு வாய்நீரால்மத்தித்து-௰-விசை கனக்கப்பூசி ஒருசீலைசெய்து-௱-எருவில் புடம்போடநீறும், பணவெடை சீரகலேகியத்தில் வைத்துண்ண சகலகாசரோகங்களும் விட்டோடிப்போமென்றறிக.

மற்றையகாசரோகத்தொகைகளையும்,நாடிகளின்கிரமவரிசைகளையும், அவுஷதபாகங்களையும், அதற்குற்றபத்தியவகைகளையும் முறைமுறையே முதற்பாகம், ௨-ம்-பாகம், ௩-ம்-பாகமாக அச்சிட்டுவருவோமாக.

ஸ்ரீ

இனி குன்மரோக உற்பத்திகளையும், அதன்நாடிகளின்நடைகளையும், அவுஷதப்போக்குகளையும், அதற்குற்றபத்தியபாகங்களையுஞ்சுருக்கமாய்ச்சொல்வோமாக.

## குன்மரோக உற்பத்தி.

நாடோறும் மையலாரிடமணைதலாலும்; துவர்ப்புள்ளவைகளையுண்ணுதலாலும், பற்பலகிழங்குவகைகளை யருந்துதலாலும், அதிககாரவஸ்துவையுண்ணுதலாலும், காலந்தப்பிக்காலங்களில் ஊணெடுப்பதினாலும், பசியை அடக்குவதாலும், கோபத்தினாலும்,குருநிந்தைசெய்குவதாலும், சிசுக்களை பட்டினிவைப்பதாலும், நால்வகை ஜாதிகளில் முதலவளாகிய பதுமினியம்மாளை கற்பழிக்க எண்ணுவதாலும், தாய்தந்தையர்களை மனம்நோகச்செய்வதாலும், மததூஷணைப்பேசுவதாலும், வஞ்சனைசெய்வதாலும், பிறர்பசிக்க உண்ணுவதாலும், சிவதூஷணைசெய்வதாலும், ஒருவன்குடியைக்கெடுக்க எண்ணுவதாலும், அதிதிகளைவைவதாலும், பெரியோர்களைப் பழிப்பதாலும், அவயவப்பழுதுள்ளவர்களைஏசுவதாலும், கொடுமைவாய்ந்த குன்மரோகம் வந்தெய்துமென்றறிக.

## குன்மரோகத்தொகைகள்.

வாதகுன்மம், பித்தகுன்மம், ஐயகுன்மம், எரிகுன்மம், வலிகுன்மம், சத்திகுன்மம், காசகுன்மம், தொந்தகுன்மம் ஆகிய குன்மரோகங்க ளெட்டவிதமெனக் கண்டுகொள்க.

## வாதகுன்மம் வருதல்.

வாதநாடியானது துடித்து பித்தத்திலுறைந்து சாரையைப்போல்நடக்கில் மலஞ்சிக்குதல், நடைகுறைதல், தேகங்கடுத்தல், சரீரம் பளுவாய்த்தோன்றல், தியங்கல், அன்னஞ்செல்லாமை, கைகால்களோச்சல், நாவரட்டல், தலைநோக்காடு ஆகிய குணங்களோடு வந்தெய்துமாம் வாதகுன்மரோகமென்றறிக.

## நிவர்த்தி மருந்து.

ஜாதிலிங்கம், நாபி, கெந்தகம், மிளகு, சுக்கு, மனோசிலை,வகைக்குப்பலம்-வ இவைகளைக்கல்வத்திலிட்டுஊமத்தைச்சார்விட்டு-உ-ஜாமமாட்டி குகைசெய்து குகைக்குள் * இரசம் பலம்-கவ-வைத்து மூடி-சு-அங்குலசட்டியில் சோத்துப்புபோட்டு ஷ குகைவைத்துமேலும்

அன்றி * இரசத்தை பிரம்மராக்காசியிலைச்சாற்றில் ஒருசாமமாட்டியெடுக்க சுத்தியாகும்.

உப்புகொட்டி சட்டிமூடி எ-சீலை வலுக்கச்செய்து-ய-எருவில் புடம் போட பற்பமாகும் ஆகியபற்பத்தை () பஞ்சதீபாக்கினிச்சூரணத்தில் இனிகெய்கலந்து-உ-குன்றிவீதம்-ம உ-வேளைவைத்துண்ணவும், கடும் பத்தியம்

உ-வது மருந்து.

நாட்டுச்சர்க்கரையில் சுத்திசெய்த இரசம் பலம்-க, ம-அங்குல சட்டியில் செய்யூர்உப்புபடிகொட்டி குழிபண்ணி கை இரசம்விட்டு மேல்சட்டிமூடி எ-சீலை வலுக்கச்செய்து-சும-நாழிகைக் காடாக்கினி யாயெறிக்க மேல்சட்டியில் மருந்துஒட்டியிருக்கும் ஒட்டிய மருந்தை யெடுத்து பணவெடை சுக்குசூரணத்தில்கலந்து-ம-நாள் இருவேளை உண்ணவும்.

ந - வது மருந்து.

சாதிலிங்கம், பூரம், வீரம், ரசச்செந்தூரம், சுக்கு, திப்பிலி, லவங்கம், அதிமதுரம், அக்கிராகாரம், ஏலரிசி, சாமபிராணி, கற்பூ ரம், கெந்தகம், கோஷ்டம் வகைக்குப்பலம்-வ, மிளகுபலம்-க இவை களை மலைத்தேன்விட்டு-உ-ஜாமமாட்டி பட்டாணிப்பிரமாணம்-ரு-நாள் இருவேளைசாப்பிடவும், இச்சாபத்தியம்.

பித்தகுன்மம்வருதல்.

பித்தநாடியானது தனித்துமிமிர்ந்து அண்ணாந்து மயிலைப்போல் நடக்கில், அடிவயிறுநோதல், வாய்நீரூறல், வாந்தியாகல், முகம்மஞ்ச ணிறம்போன்றிருத்தல், கிறுகிறுப்பு, மூர்ச்சை, நெஞ்சில் கோழை கட்டல், தேகமெங்கும் எரிச்சல், கைகாலெரிச்சல், வெய்யலில் தலை சுழற்றல், சிறுநீர் சிவந்திருத்தல், மலம் முக்கிவிழுதல், புளியேப்பம், நெஞ்சில் குத்துண்டாதல் பசியில்லாமை, நாவரட்டலாகிய குணங்க ளோடு வருமாம் மகாகொடியவினையாகிய பித்தகுன்ம ரோகமென் றறிக.

நிவர்த்திமருந்து.

கல்லுப்பு, வெடியுப்பு, சாரம், படிகாரம், பூநீறு, வளையலுப்பு, இந்துப்பு, கறுப்புஉப்பு, நுரையுப்புவகைக்குப்பலம்-வ, மிளகு, சுக் கு, திப்பிலி, ஏலரிசி, சீரகம், வகைக்குப்பலம் உ இவைகளை மலைத்

() பஞ்சதீபாக்கினிச் சூரணமாவது:—சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலரிசி, சீரகம் சமனெடைகொண்டு பொன்வறுப்புசெய்து சூரணம் செய்யவும்.

தேன்விட்டாட்டி சுண்டைக்காய்ப் பிரமாணம்-உ௰-நாள்-சு௰-வேளை கொள்ளவும், இச்சாபத்தியம்.

உ-வது மருந்து.

தோல்போக்கி வில்லையாக்கிப் பசுநெய்யால் பொன்வறுப்பாய் வறுத்தெடுத்த இஞ்சிபலம்-௰, சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலரிசி, லவங்கம், ஓமம், வாலுளுவை, சாதிக்காய், ஆனைத்திப்பிலி, சீரகம், அதிமதுரம், குராசானிஓமம், அமுக்கரா, கசகசா, லவங்கப்பத்திரி, கொத்துமல்லி, பேரீச்சு, மோடி, முந்திரிகை வகைக்குப்பலம்-வ இவைகளைச்சூரணித்து சீனிபலம்-௰-கூட்டி திரிகடிப்பிரமாணம். ஒருமண்டலம் உட்கொள்ளவும், பத்தியமில்லை.

ங-வது மருந்து.

விளையலுப்பு, சிவப்புஉப்பு, கறுப்புஉப்பு, கல்லுப்பு, திப்பிலி, ஓமம், ஏலக்காய்அரிசி, லவங்கம், வகைக்குதொலா-உ, நிலவாகைதொலா-உ இவைகளைச் சூரணித்து, சர்க்கரைதொலா-சு-கூட்டி இரவில் போஜனஞ்செய்தபின் ஒரு விராகனெடை-௰-வேளை புசிக்க பித்தகுன்மரோகம்விட்டோடிப்போமென்றறிக.

ஐயகுன்மம் வருதல்.

ஐயநாடியானது கோழிபோன்றுநடந்து பித்தத்திலுறைந்திடில் வாய்நீரூறல், இளைப்பு, உடல்வற்றல், பெலன்குறைதல், அன்னஞ் செல்லாமை, தலைவலித்தல், மேனிவெளுத்தல், நெஞ்சிற்புகைதல், மெய்நடுக்கல், திடுக்கிடல், உள்ளங்கை கால்வியர்த்தல், மூர்ச்சித்தல், அடிவயிறு, பக்கம், கீல்கள், இடுப்புமுதலியவைகளை நோப்படுத்தலாகிய குணங்களோடுவருமா மையகுன்மரோகமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

ஆத்துதும்மட்டிக்காய் சாறுபடி-உ-ல், செய்யூருப்புபடி-ஊ-கரைத்து அடுப்பில்வைத்து சுண்டக்காச்சி விராகனெடை-௰டு-வேளை தேனிற்கொள்ளவும், இச்சாபத்தியம்.

உ-வது மருந்து.

நாயுருவிஉப்பு, வாழைஉப்பு, தாழைஉப்பு, தென்னைஓலைஉப்பு, சவ்வீரம், பூரம், சாரம், பூநீறு, இந்துப்பு, விளையலுப்பு, எள்ளுப்பு, சங்குஉப்பு, கல்லுப்பு, வெடியுப்பு, கறுப்புஉப்பு, படிகாரம், வெண்காரம் வகைக்குப்பலம்-க, மிளகுபலம்-ங இவைகளை மலைத்தேனில் ங-ஜாமமாட்டி சுண்டக்காயளவு குளிகைசெய்து கால்மண்டலம் இரு

வேளையுண்ணவும், கடும்பத்தியம், அன்றியும், மேற்கூறியசவ்வீரத்தை கெந்தகத்தில் வாட்டியெடுக்கவும், பூரத்தை படிகாரம்துளைத்து வைத்து மேலும் படிகாரத்தூள்கொட்டி-ங-சிலைசெய்து-ங-எருவில் புடம்போடபற்பமாம் அதைசேர்த்துக்கொள்ளவும்.

ங - வது மருந்து.

கொட்டைப்பாசியையும், கழற்சியிலையையும், வெடியுப்பையும் சமன்கொண்டு பேய்த்தும்மட்டிக்காய்ச்சாற்றில் ஒருசாமமாட்டி சிறுசுண்டக்காய்வீதம்-ரு-நாள் இருவேளைகொள்ள ஐயகுன்மரோகம்விட்டகலுமென்றறிக.

எரிகுன்மம் வருதல்.

பித்தநாடியும், ஐயநாடியும், சமன்மாத்திரைகொண்டு புருப்போலும், அன்னம்போலும் நடக்கில், குடல்பிறட்டல், திடுக்கிடல், என்பெல்லாம்பற்றியெறிதல், அடிவயிறு சற்றுஎரிச்சலாகி இழுத்துப்பிடித்தல், வாய்நீரூரல், தலைசுழட்டல், வாந்தி, வயிறுப்பல், கிறுகிறுத்தல், புளித்தயேப்பம், வியர்வைதோன்றல், வயிறுபசிபோலிருத்தல், மயிர்க்குச்சிலிடுதல், பொருமல், வயிறுகழிதல், அன்னஞ்செல்லாமை, இளைப்பு, மூர்ச்சை, சரீரம்வற்றல், நாவரட்டலாகியகுணங்களோடு வந்தெய்துமா மெரிகுன்மரோகமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

நிலவாகையை வெள்ளெருக்கம்பாலாலாட்டி விளாங்காய்ப்பிரமாணமுண்டைசெய்து செய்யூருப்பை அதனுள்வைத்துமூடி ஒருசிலை செய்து கோழிபுடம்போடவும், இவ்வண்ணம்-ய-விசை புடம்வைத்து விருகனெடை தேனில்தாக்கவும், இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

கல்லுப்பு, வெண்காரம், வெடியுப்பு வகைக்குப்பலம்-வ, சத்திநாதஉப்புபலம்-க, சப்ஜாசாற்றிலாட்டி உணர்த்திஎடுத்த பளிங்குகூடன் பலம்-க, ஆவினெய்யாலறைத்து, பயிரவனஸ்தி, வால்மிளகு, ஏலக்காயரிசி, சிறுலவங்கப்பட்டை வகைக்குப்பலம்-வ ஒன்றாக்கி சந்தனத்தர் பலம்-வ, புழுகுவிருகனெடை ஒன்றுகூட்டிப்பிசைந்து பீங்கானிலிட்டு மேல்பீங்கானில்மூடி வாய்புரம் உளுந்துமாவால் சிலைசெய்து நாலுவிரற்கடைஉயரம் மணல்சட்டியில் கொட்டி ஷை பீங்கான் வைத்து-ங-ஜாமமெரிக்க பதங்கமாகும் ஆகியபதங்கத்தில் காசெடை திரிகடுகு சூரணத்தில்வைத்து சீனிநெய்கலந்து கால்மண்டலம்-உய-வேளைகொள்ளவும், இச்சாபத்தியம்.

### ௲ - வது மருந்து.

நாபிபலம்-௨, இரசம், ஜாதிலிங்கம், நெல்லிகெந்தி, மனோசிலை படிகாரம், வெண்காரம் வகைக்குப்பலம்-க, சுக்கு, மிளகு, திப்பிலி வகைக்குப்பலம்-உ, சூரணித்து ஒன்றுசேர்த்து மலைத்தேனில்-௬-ஜாமமாட்டி சிறுபட்டாணிவீதம்-௫-நாள் இருவேளைசாப்பிட எரிகுன்மரோகம்விட்டகலுமென்றறிக, இச்சாபத்தியம், அன்றி நாபியை நீலியாழத்தில் வேசவைத்தெடுக்கவும், இரசத்தை நாட்டுச்சர்க்கரையிலரைக்கவும், கெந்தியை ஆவின்பாலில் வேகவைத்தெடுத்துக்கொள்ளவும், லிங்கத்தை முலைப்பாலில்-௩-ஜாமம் சுருக்கியவும், மனோசிலையை கற்சுண்ணத்தில்வைத்துக் கழுதைசிறுநீரில்தாளிக்கவும், திரிகடுகுசூரணத்தை ஆவின்பாலில் பிட்டுவைக்கவும்.

### சத்திகுன்மம் வருதல்.

பித்தநாடியானது வாதத்திலுறைந்து தவளையைப்போலும், அடைக்கலத்தைப்போலும் எகிரிப்பாயில், இருமல், வாந்தி, விக்கல், கொட்டாவி, திமிரு, ஈரலெரிச்சல், ஏக்கம், தூக்கமில்லாமை, என்பெல்லாம்நோதல், மயக்கம், தியக்கம், நெஞ்சில்கறகறத்தல், குத்தல், முளையடித்ததுபோன்றிருத்தல், வயிறுபொருமல், பெலன்குறைதல், மலஞ்சிக்கல், அன்னஞ்செரியாமை, புளியேப்பம், நடையில்கால்பின்னல், அரோசிகம், நெஞ்சுணரல், நரம்புகள்நோதல், வயிறூதல், மேனிவாடல், கோழைகட்டல், மேன்மூச்சுவாங்கல், மனஞ்சிதறல், அன்னஞ்செல்லாமை, யாதின்மேலும் பிரியப்படாமை, விலாவெலும்பில் இரும்புக்கார்சொருகுதல்போன்றிருத்தல், முதுகந்தண்டெலும்புநோதல், இடுப்புகடுத்தல், குத்தல், சிலவேளை சுரம்போன்றிருத்தலாகிய குணங்களையுண்டாக்கவெய்துமாஞ் சத்திகுன்மரோகமென்றறிக.

### நிவர்த்தி மருந்து.

சோத்துப்பு, வெடியுப்பு, படிகாரம், சாரம், இந்துப்பு, வளையலுப்பு, வெண்காரம் வகைக்குப்பலம்-க இவைகளை தும்பட்டிச்சாற்றுல்-உ-ஜாமமாட்டிப் பில்லைசெய்துணர்த்தி ஓட்டில்வைத்து ஓடுமூடி சீலைசெய்து-௨௰-எருவில் புடமிட்டுப்பின் இரசம்பலம்-க-சேர்த்துநிம்பழச்சாற்றுலாட்டிப் பில்லையைமுன்போல்வைத்து எழுசீலைவலுக்கச்செய்து புடம்போட்டெடுத்துப் பின் பூரம் விருகனெடை. ஒன்றுசேர்த்து பழச்சாற்றுலாட்டி புடம்போட்டுவிருகனெடைதேனில்-௰-நாள் கொள்ளவும், கடும்பத்தியம்.

உ - வது மருந்து.

சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலரிசி, பரங்கிச்செக்கை, நன்னாரி சிறுபூலா, நெல்லிவேர்க்கு; விலாமிச்சு, கோரைக்கிழங்கு இவைகளைச்சூரணித்து சீனிநெய்கலந்து திரிகடிப்பிரமாணம்ஒருமண்டலம் கொள்ளவும், பத்தியமில்லை, சூரணங்களை ஆவின்பாலில் பிட்டுவைக்கவும்.

ங - வது மருந்து.

சோத்துப்புபடி-க, எருக்கம்பாலால்-ங-நாள்ஆட்டி வில்லைதட்டிக்காயவைத்துக் கோழிபுடம்-க, புளியம்பூச்சாற்றால் விசைக்கு-ச-ஜாம மாட்டியாட்டிப் புடம்-ல-போட்டெடுத்து-ஒ - விருகனெடைப் பிரமாணம் தேனில் அரைமண்டலம்கொள்ள சத்திகுன்மரோகம்விட்டுவிட்டுக் காடுறையுமென்றறிக, இனி அட்டகுன்மரோகங்களுக்கும் பொதுஅவுஷதங்கள் சொல்லுவோமாக.

அட்டகுன்மரோகங்களுக்கும் பொது அவுஷதங்கள்.

சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலரிசி, சீரகம், நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக்காய், வில்வவோடு, நெற்பொறி, அதிமதுரம், கோஷ்டம், பீர்க்கு, சித்தாமுட்டி, பேராமுட்டி, சந்தனத்தூள், வில்வவேர், வெட்டிவேர், விலாமிச்சு, நன்னாரி, சோம்பு, வெண்மிளகு, அறுகன்கட்டை, பேய்ப்புடல், பன்னீர்ப்பூ, விளாஓடு, பரங்கிச்செக்கை, முல்லைஇவைகளைச் சமன்கொண்டிடித்துப்பொடியாக்கி நாளொன்றுக்கு அரைஆழாக்குப்பொடிபோட்டு மூன்றுழாக்குஜலம்விட்டு முக்காலாழாக்காக சுண்டக்காச்சி ஆவின்பால் ஆழாக்கு விட்டு சீனிபலம்-க-சேர்த்து நாளொன்றுக்கு இருவேளை மண்டலம்கொள்ளவும், பத்தியமில்லை, உஷ்ணபதார்த்தம் நீக்கவும்.

உ - வது மருந்து.

சீரகம், ஏலம், சுக்கு, அதிமதுரம், தேவதாரம், நன்னாரி, நெற்பொரி, விளாயிலை, கொத்துமல்லி, சித்தாமுட்டி, பச்சைப்பயறுஇவைகளைச்சமன்கொண்டு முன்போலக்கியாழமிட்டுமண்டலம்கொள்ளவும்.

ங - வது மருந்து.

கழற்பருப்பு, வெள்ளைப்பூண்டு, கடுகு, வசம்பு, சுக்கு இவைகளைச் சமன்கொண்டுபொடித்து முன்போல்கியாழமிட்டு கால்மண்டலம் கொள்ளவும்.

சு - வது மருந்து.

நெற்பொரி பயறு, வில்வம், முல்லை, சீரகம், ஏலம், சுக்கு, நெல்லி, பேய்ப்புடல், பன்னீர்ப்பூ இவைகளைச்சமன்கொண்டு முன்போல செய்விளநீர்விட்டுக்காச்சி இருவேளை-உ௰-நாள் கொள்ளவும்.

ரு - வது மருந்து.

பூரம் விருகனெடை-கவ, லிங்கம்-வ, மிளகுபலம்-க இவைகளை மலைத்தேனல்-சு-ஜாமமாட்டி தூதுளங்காய்ப்பிரமாணம்-ரு-நாள் இருவேளைகொள்ளவும், கடும்பத்தியம்.

சுா - வது மருந்து.

வெண்காரம், தாளகம், கெந்தி, பூரம், லிங்கம், காந்தம், மனோசிலை, சுக்கு, மிளகு, திப்பிலி, தான்றிக்காய், நெல்லிக்காய், கடுக்காய் வகைக்குப்பலம் க இவைகளைத்தேனில் ஜாமமாட்டி தூதுளங்காய்ப் பிரமாணம் குளிகைசெய்து-௰-நாட்கொள்ள கொடியவினைசம்மந்தமாகிய குன்மரோகங்கள் விட்டோடிப்போமென்றறிக.

தாளகத்தைச் சுண்ணத்தில்வைத்தெரிக்கவும், கெந்தியை ஆவின்பாலில் வேகவைத்தெடுக்கவும், லிங்கத்தை முலைப்பாலிலூறப்போடவும், காந்தத்தை நிம்பழச்சாற்றில்-ந-நாளூரப்போட்டெடுக்கவும், பூரத்தைப் படிகாரநீரில்-ந-நாளூறப்போடவும், மனோசிலையை மிளகுநீரில்-ந-நாளூரப்போடவும், சூரணங்களை ஆவின்பாலில்பிட்டுவைக்கவும் சுத்தியாம், கடும்பத்தியம்.

மற்றைய குன்மரோகத் தொகைகளையும், நாடிநடைகளையும், வியாதிக்குறிகளையும், பத்தியபாகங்களையும்-க-ம் பாகம், உ-ம் பாகம், ந-ம் பாகமாக முறைமுறையே அச்சிடுவோமாக.

இனி சூலைரோகங்களையும், நாடிநடைகளையும். ரோகநிதானங்களையும், அவுஷதபாகங்களையும், பத்தியகிரமங்களையும், சுத்திவகைகளையும், சூலைரோகத்தொகுப்புகளையும், சிலதுகூறுவோமாக.

## சூலைரோக உற்பத்தி.

சித்தினிமடவாரிடஞ் சையோகித்தலாலும், ஓயாத நடையினுலும், அக்கினிமந்தத்தினுலும், பனியில் திரிதலாலும், துவர்ப்புள்ளவைகளை யருந்துதலினுலும், லாகிரிகளுண்பதினுலும், பிறர்பசிக்க உண்ணுதலாலும், அதிதிகளை அடித்தலாலும், பொறாமை வஞ்சகத்தினுலும், பொருளின்மையாலும், சூலைரோகம் வந்தெய்துமென்றறிக.

சூலரோகத்தொகைகள்.

வாதசூலை, பித்தசூலை, ஐயசூலை, மேகச்சூலை, முதிர்சூலை, கார்சூலை, பக்கசூலை, குன்மசூலை, அத்திசூலை, சுரச்சூலை; தூரச்சூலை, கரச்சூலை, அடிவயிற்றுசூலை, விலாசூலை, தொந்தசூலை ஆகியசூலைரோகவகைகள் பதினைந்தாகவிளைந்ததென்றறிக.

வாதசூலை வருதல்.

வாதநாடியானது திமிர்த்து மத்தகஜம்போல்நடக்கில் கைகாலுளைவு, திமிறு, அதிசித்திரை, தேகமினுமினுப்பு, பசியில்லாமை, மலபந்தம், அசீரணம், மார்பு, விலாப்பக்கம், வயிறுமுதலியவிடங்களில் ஈட்டியால் குத்துதல்போன்றிருத்தல் ஆகியகுணங்களோடு வந்தெய்துமாம் வாதசூலைரோகமென்றறிக.

நிவர்த்தி கியாழம்.

சுக்கு, மிளகு, சீரகம், திப்பிலி, ஏலரிசி, வாய்விளங்கம், கடுகுரோகணி, கழல்பருப்பு, வில்வவோடு, நெல்லிவற்றல், கொத்துமல்லி, சீந்தில், நன்னாரி, பேய்ப்புடல்இவைகள்சமன்கொண்டுநறுக்கிப்பாண்டத்திட்டு உ-படி ஜலம்விட்டு ஆழாக்குஜலமாக்கி சீனிபால்சேர்த்து உய-நாள் இரண்டுவேளைசாப்பிடவும், இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

கிளைமான்கொம்பைச் சுட்டெடுத்து வெள்ளாட்டுச்சாணத்தில் ய-நாளூறப்போட்டுக் கடுரவியில் வைத்து கறுநொச்சிச் சாற்றால்-சு-ஜாமமாட்டி சிறுவில்லைசெய்துகெஜபுடமிட்டெடுத்து திரிகடுகுசூரணத்தில் பணவெடைவைத்து நெய்கலந்து-உய-நாள் இருபோதுசாப்பிடவும், இச்சாபத்தியம்.

ஙு - வது மருந்து.

பரங்கிவைப்புசூதபற்பம் பலம்-க, படிகாரத்தில் வைத்தெடுத்த பூரபற்பம் விருகனெடை-உ ஒ, பாலில்வேகவைத்தெடுத்தநெல்லிகெந்தி விரு-ரு இவைகளைக் கற்றாழைச்சோற்றால்-ஙு-ஜாமமாட்டியாட்டி மணல்மறைவில்-ய-புடம் போட்டெடுத்து காசெடைவெண்ணெயில்-ய-நாள்கொள்ளவும் வாதசூலைரோகம் விட்டோடிப்போமென்றறிக, கடும்பத்தியம்.

பித்தசூலை வருதல்.

பித்தநாடியானது கொதித்துக்கிறுகிறுத்து சாரையைப்போல் நடக்கில் கிறுகிறுப்பு, சுழலைமூர்ச்சை, நாவரட்சி, தேகம் கனகனத்

திருத்தல், மேனிவுலரல், முகஞ்சோர்தல், அடிவயிற்றில் கமகமப்பா யிருத்தல், தொண்டையில் கார்போன்றிருத்தல், மாரில்எரிச்சல்,உள்ளங்கைகால் எரிச்சல், அக்கினியேகுடிகொண்டு வாய்வாய்ப்பிரண்டு தேகத்தில் பலவிடந்தங்கி பிடித்துநோக்காடும், குணம்வேறுபட்டும் ஆகியகுணங்களோடு பித்தசூலைரோகம் வந்தெய்துமென்றறிக.

நிவர்த்தி கியாழம்.

திப்பிலி, சிரகம், ஏலரிசி, சுக்கு, நன்னாரி, பற்பாடம், பேய்ப்புடல், செல்லி, முள்ளி, ஆவாரைவேர், முத்துக்கொட்டைவேர், தேவதாரம், பன்னீர்ப்பூ, சித்தாமுட்டி, நெற்பொறி, பரங்கிசெக்கை, நெல்லுபொறி இவைகள் சமன்கொண்டு நறுக்கிப் பாண்டத்திட்டு-க-படிஜலம்விட்டு ஆழாக்குஜலமாகச் சுண்டக்காச்சி சீனி,ஆவின்பால் கூட்டி-உ௰-நாள் அந்திசந்திகொள்ளவும், இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

எள்ளெண்ணை படி-உ-கழற்சியிலைச்சாறு, பொன்னாங்கண்ணிச் சாறு, பொடுதலைச்சாறு, இஞ்சிச்சாறு, நிம்பழச்சாறு, கொத்துமல்லிச்சாறு, புதினாச்சாறு, கீழ்க்காய்ச்சாறு, கையாந்தகரைச்சாறு,மணத்தக்காளிச்சாறு வகைக்குப்படி-வ, சுக்கு, மிளகு, சிரகம், ஏலரிசி, திப்பிலி, கோஷ்டம், வால்மிளகு; அதிமதுரம், அக்ராகாரம், வாய்விளங்கம், வகைக்குப்பலம் க, ஆவின்பால்படி-வ, ஒன்றுசேர்த்து நீர்வற்றமெழுகுபதத்தில் காச்சிஇறக்கி, மூன்றுநாள் முலைப்பாலில் ஊரப்போட்ட இரசகற்பூரம் விராகனெடை-க-பொடித்துப்போட்டு உச்சிக்கரண்டிவீதம்-எ-நாள் மூன்றுமுறைசாப்பிடவும், கடும்பத்தியம்.

ங - வது மருந்து.

விளக்கெண்ணையில்-உக விசை உருக்கிச்சாய்த்த சிறுகண்ணுகம் பலம்-க, நாட்டுச்சர்க்கரையில் சுத்திசெய்த இரசம் பலம்-உ, நெல்லிகெந்தி பலம்-க இவைகளை நிம்பழச்சாற்றுலாட்டி கற்பூரசலாசத்து பலம்-உ-க்கு கவசங்கட்டி-எ-சீலைசெய்து-உ௫-எருவில்புடம்போட்டு அடியிற்கூறிய தேத்தான்லேகியத்தில்பணவெடைவைத்து-உ௰-நாள் அந்திசந்திகொள்ள பித்தசூலைரோகம் விட்டோடிப்போமென்றறிக.

தேத்தான் லேகியம்.

தேத்தான்கொட்டை பலம்-௫, சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலரிசி, சிரகம், ரோகணி, விளங்கம், தான்றிக்காய், கடுக்காய், நெல்லிக்காய் வகைக்குப்பலம் உ, சூரணித்து பனைவெல்லம் பலம் எஉ, பாகுசெய்

து ஷை சூரணத்தைப்போட்டுக்கிண்டி நெய்வார்த்துப்பதமாயினபின் இறக்கி தேன்பலம்-உ ஒ விட்டு தூதுளங்காய்ப்பிரமாணம் குளிகை செய்யவும், இச்சாபத்தியம்.

ஐயசூலை வருதல்.

ஐயநாடியானது துடித்து வாதத்திலுறைந்து சோழியைப்போலச்சேர்ந்திடில் தொண்டைவலித்தல், சோழைகட்டல், அடிவயிறு நோதல், தேகமெங்கும் புண்போலிருத்தல், வியர்வைதோன்றல், மெய் கண் வெளுத்தல், வாய்நீரூறல், சுரமடித்தல், ஒவ்வோரிடங்களில் பிடித்துநோதல், முதுகந்தண்டெலும்பு, மார்பு, விலாப்புரம், இந்த அவயவாதிகளில் வாய்வுதங்கிபிடித்து மூச்சுவிடமாட்டாமல் நோதலாகிய குணங்களோடு வந்தெய்துமாம் ஐயசூலைரோகமென்றறிக.

நிவர்த்தியாமம்.

சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலரிசி, பெருங்காயம், வெள்ளைப்பூண்டு, ஓர்நிறையாய்ச் சிதைத்துப்போட்டு-ஒ படி ஜலம்விட்டு ஆழாக்குஜலமாகக்காச்சி இறக்கி-ரு-நாள் இருபோது கொடுக்கவும், இச்சாபத்தியம்.

உ-வது மருந்து.

சாரம், பூநீறு, பூரம், படிகாரம்,வெடியுப்பு வகைக்குப்பலம்-வ மிளகுபலம்-கவ, சுக்கு, திப்பிலி, ரோஜாப்பூ வகைக்குப் பலம்-க இவைகளை நிம்பழச்சாற்றாலாட்டி சிறுசுண்டக்காய்வீதம் குளிகை செய்து-ம-நாள் இருபோதுசாப்பிடவும், சுடும்பத்தியம்.

ந - வது மருந்து.

படிகாரபற்பம், பூரபற்பம், லிங்கம், இரசபற்பம் வகைக்குவிருகனெடை-க இவைகளைப் பொன்னாங்கண்ணிச்சாற்றில் ந-ஜாமமாட்டிப் பின்நிம்பழச்சாற்றில்-ச-ஜாமமாட்டி மிளகுப்பிரமாணம் குளிகை செய்து கால்மண்டலம் இருபோதுசாப்பிடவும், இச்சாபத்தியம்-அன்றிபடிகாரத்தை குடுவைக்குள்வைத்துக் கீழும்மேலும் ஆவின்வெண்ணையைப்பொதிந்து வாய்மூடி-ந-சீலைசெய்து புடம்போடவும், பூரத்தைப்படிகாரத்துக்குள் துளைசெய்துவைத்து துவாரம்மூட ஷை படிகாரத்தூள்கொட்டி-ந-சீலைசெய்து புடம்போடவும், ஐயசூலைரோகம் விட்டகலுமென்றறிக.

குன்மசூலை வருதல்.

பித்தமும் வாதமு மொருங்குசேர்ந்து நண்டைப்போலக்கிளறி நடக்கில் வயிறுபொருமல், அடிவயிறு வில்போன்றிருத்தல், வாய்நீ

ரூரல், சத்தியுண்டாதல், கிறுகிறுப்பு, மூர்ச்சை, நாவரட்டல், மேனி கறுத்தல், தேகம்வாடல், மலஞ்சிக்கல் ஆசனத்தில் குத்தல், பத்துவி தக்கறிகளோடு போசனமருந்தியதுபோல் ஏப்பம்விடல், வியர்வை தோன்றல், நாவுருசியில்லாமை, பசியில்லாமை, புளித்தஏப்பம், நாட் குநாள் மேனிவாடல், நாவரட்டல் ஆகியகுணங்களோடு வந்தெய்து மாம் குன்மசூலைரோகமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

செய்யூருப்புபடி-க, ஆத்தும்மட்டிக்காய்ச்சாறு, நிம்பழச்சாறு, கழற்சியிலைச்சாறு, சீரகக்கியாழம் வகைக்குப்படி-க இவைகளை ஒன் றாடடுத்திக்கறைத்து நீரெல்லாஞ்சுண்டக்காய்ச்சி உப்பாக்கி ஒருபலமெ டுத்து சீரகம் சமன்சேர்த்து மிளகுநீரில் மெழுகாகஆட்டி தூதுளங் காய்ப்பிரமாணம் பத்துநாளிருபோதுகொள்ளவும் இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

சுக்கு, மிளகு, சீரகம், ஏலரிசி, திப்பிலி வகைக்குப்பலம்-க, சூர ணித்துப்பின் இஞ்சிச்சார், நிம்பழச்சார், புதிஞச்சாறு ஒன்றுபடுத்தி ச-ஜாமமாட்டி ஒருமலதுவரைப்பிரமாணம் குளிகைகட்டி-ய-நாள் இருபோது சாப்பிடவும், புளிமிளகாய்க்குப்பதில் மிளகு எலுமிச்சம் பழம்சேர்க்கவும், உஷ்ணபதார்த்தமும், கடுகு நல்லெண்ணெயும் நீக் கவும்.

ந - வது மருந்து.

இஞ்சி, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலரிசிவகைக்குப்பலம் க,இந் துப்பு, வளையலுப்பு, வெடியுப்பு, சோத்துப்பு, வெண்காரம், வகைக் குப்பலம்-உ இவைகளை மலைத்தேனில் கூ-ஜாமமாட்டி சிறுசுண்டக் காய்விதம் குளிகைசெய்து நிம்பழச்சாறுபடி அரைக்காலில் கலந்திய குன்மசூலைரோகம் விட்டோடிப்போமென்றறிக, இச்சாபத்தியம்.

தொந்தசூலை உற்பத்தி.

வாதம், பித்தம், சிலேற்பனமாகிய மூன்றுநாடிகளும் சிலவேளை ஒன்றுக்கொன்று உயர்ந்தும், தாழ்ந்தும், சமப்பட்டும், உராய்ந்தும், கிடுகிடுத்தும், அமர்ந்தும், கொதிப்பெடுத்தும், அந்தந்தநடைகள்பிச கியும்நடக்கில் தேகமெங்கும் வலித்தும், கைகால்களோய்ந்தும், கீல் கள்பிடித்தும்,நாவுதினவெடுத்தும், நெஞ்சில்கார்போன்றிருந்தும், வா ந்தியெடுத்தும், ஏப்பம்விடுத்தும், மனம்பேதித்தும் ஆகியகுணங்க ளோடுவந்தெய்துமாம் தொந்தசூலைரோகமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

வெண்காரம், சாரம், படிகாரம், பூநீறு, சோத்துப்பு வகைக்குப் படி அரைக்கால் பொடித்து படிநிம்பழச்சாற்றில் கரைத்து சுண்டக் காச்சி உப்பாக்கிப் பின்வங்காரவாசிச்சாற்ருல்-௬-ஜாமமாட்டிப் பில்லை செய்து உம-எருவில் புடம்போட்டெடுத்து விருகனெடைவீதம் சீரகச்சூரணத்தில்வைத்துண்ணவும், இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

பூரம், படிகாரம், இரசச்செந்தூரம், அயச்செந்தூரம், சோத்துப்பு, இந்துப்பு வகைக்கு விருகனெடை-௧ இவைகளை இஞ்சிச்சாற்றில்-௬-ஜாமம், நிம்பழச்சாற்றில்நாலுஜாமமாட்டிப்பில்லைசெய்துணர்த்தி ஓட்டில்வைத்து ஓடுமூடி-எ-சீலைசெய்து-ம-எருவில்புடம்போட்டெடுத்து விருகனெடை-வ-வீதம் இஞ்சிச்சூரணத்தில் வைத்துண்ணவும் கடும்பத்தியம், இஞ்சியை ஆவினெய்யில் பொன்வறுப்பாய்வறுத்துலர்த்திச் சீரகம் சமன்சேர்த்துச் சூரணிக்கவும்.

ந - வது மருந்து.

இரசம், கெந்தி, இரசபற்பம், காந்தம், மனேசிலை வகைக்குவிருகனெடை-௧ இவைகளைமிளகுநீரில்-அ-ஜாமமாட்டிப் பின்நிம்பழச்சாற்றில்-௬-ஜாமமாட்டி துவரைப்பிரமாணம் குளிகைசெய்து சீரகம், திப்பிலி, ஏலரிசி, சமன்சேர்த்த சூரணத்தில்-ரு நாளிருபோதுவைத்துண்ண மகாகொடியதொந்தசூலைரோகம் விடுவிட்டுக் காடுறையுமென்றறிக, கடும்பத்தியம்.

சூலைரோகம்பதினைந்துக்கும் பொதுஅவுஷதங்கள்.

கல்லுப்புபடிஒன்றை ஆடுதிண்டாப்பாளைச்சாறு, பொற்றலைக்கையான்சாறு வகைக்குப்படி ௧-ல் கரைத்து சுண்டக்காச்சி உப்பாக்கிஅந்தஉப்பை ஷை ஆடுதிண்டாப்பாளைச்சாற்ருல் விசைக்கு-௬-ஜாமவீதமாட்டியாட்டிப் பில்லைசெய்து-உ௰-எருவில்-ம-புடம்போடச் செந்தூரமாகும், செந்தூரத்தை பணவெடை சீரகலேகியத்தில் வைத்து-ம-நாள் இருபோதுண்ணவும், இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், முள்ளி, வாய்விளங்கம், சீரகம், மல்லி, அதிமதுரம், தாளிசப்பத்திரி, ஏலரிசிவகைக்குப்பலம் ௧, சூரணித்து ஆவின்பாலில் பிட்டுவைத்து சீனிபாகுசெய்து சூரணத்தைக்கிண்டி நெய்விட்டிறக்கி தேன்கலந்து கொட்டைப்பாக்களவு லேகியத்தை-ம-நாள் சாப்பிடவும், இச்சாபத்தியம்.

௩ - வது மருந்து.

உப்புபலம் ஐந்தை சித்தாமணக்கு இலைச்சாற்றில்-௪-ஜாமம்-சீமைகரசலாங்கண்ணிச் சாற்றில் - ௪ - ஜாமமாட்டிப் பில்லைசெய்து-௰-எருவில்புடம்போட்டு சிங்கியுற்பம்,திப்பிலி,சீரகம் வகைக்குப் பலம் க-சேர்த்து தேன்விட்டாட்டி தூதுளங்காய்ப் பிரமாணம்-௫-நாளிரு போதுகொள்ளவும், இச்சாபத்தியம்.

௪ - வது மருந்து.

கல்லுப்பை எருக்கம்பாலிலூறப்போட்டுப்பின்சதுரக்கள்ளிக்கட்டையைத்துளைத்து அதனுளுப்பைவைத்துஷைபிரடைகொண்டுமூடி சீலைசெய்து முழப்புடம்-௩-போட்டெடுத்து சுக்குலேகியத்தில் வைத்துண்ணவும், இச்சாபத்தியம்.

௫ - வது மருந்து.

ஆவின்பாலில்வேகவைத்தெடுத்த கெந்தி,சுக்கு,மிளகு,திப்பிலி; தான்றிக்காய், நெல்லிக்காய், கடுக்காய், வாய்விளங்கம், ஓமம், கடுகு, இராம்பு, ஜாபத்திரி, கடுகுரோகணி, சிவதைவேர், கோஷ்டம், பரங்கிப்பட்டை அமுக்கராவகைககுப் பலம்-க-சூரணித்து நெய்சீனிகலந்து திரிகடிப்பிரமாணம்-௰-நாளிருபோதுண்ணசகலசூலைரோகங்களும் விட்டோடிப்போமென்றறிக.

மற்றையசூலைரோகங்களையும், நாடிக்குறிகளையும்; வியாதிரூபங்களையும், அவுஷதபாகங்களையும், சுத்திசெய்யும்வகைகளையும், பத்தியபாகங்களையும், க-ம்-பாகம், உ-ம்-பாகம், ௩-ம்-பாகமாக முறைமுறையே அச்சிடுவோமாக.

இனி மேகரோகங்களும், நாடிநடைகளும், வியாதிக்குறிப்புகளும், அவுஷதப்போக்குகளும், சுத்திவகைகளும், பத்தியபாகங்களும், சிலதுசொல்வோமாக,

## மேகரோக உற்பத்தி.

இளந்தைப்பருவத்தில் பற்பலமாதர்களிடம்பகலிரவின்றிநாடோறும் லீலைபுரிவதினால் மூலத்திலிருந்து சடராக்கினிமேலெழுந்து விந்துவைநீற்றச்செய்து வெளிகாணுகையில் நாபியிலிருந்து அக்கினிமந்தம்பற்றி ஆண்குறியின் துவாரவழிமுழுமையுமிரணமாகி மேகரோகத்தை விளைவிக்குமென்றறிக.

### மேகரோகத்தொகைகள்.

வெள்ளைமேகம், இரத்தமேகம், மதுமேகம், தந்திமேகம், ஆச்சியமேகம், சுத்தமேகம், பிரமியமேகம், மாங்காவிமேகம், அப்பியமேகம், ஆபிரம்மியமேகம், சாம்பீர்ணமேகம், சாத்தியமேகம், ஆவிருதமேகம், வாசமேகம், உத்தமமேகம், கிரந்திமேகம், அழகுமேகம்,மச்சமேகம், சுராரிமேகம், சுக்கிலமேகம், உதகமேகம் ஆகிய மேகரோகவகைகள் இருபத்தொன்றாகவழங்கியதென்றறிக.

### வெள்ளைமேகம்வருதல்.

பித்தநாடியானது அழலையுண்டாகி மான்போலக் குதித்துநடக்கில் பசியில்லாமை, கைகால்களசதி, சோம்பல், தூக்கம், நாவரட்சி, மனஞ்சோர்தல், லிங்கத்துவாரத்திலெரிச்சல், சிறுநீர்விடுமுன்இந்திரியத்தைப்போல்கீழ்வீழ்தல், ஆண்குறிக்கு அதிகாரகாலத்தில் அடித்தண்டுநோக்காடு, நீர்ச்சுருக்கு ஆகியகுணங்களோடு வந்தெய்துமாம் வெள்ளைமேகரோகமென்றறிக.

### நிவர்த்திமருந்து.

சுக்கு, சீரகம், ஏலரிசி, திப்பிலிவகைக்குப்பலம்-க, சூரணித்து இரசகற்பூரம் விருகனெடை-க-சேர்த்து சித்தாமணக்கெண்ணெபடி-வ-கூட்டிக் கலக்கி உச்சிக்கரண்டிவீதம்-ரு-நாளிருபோதுண்ணவும், அன்றி சூரணங்களை ஆவின்பாலில் பிட்டுவைக்கவும், இரசகற்பூரத்தை-ந-நாள் முலைப்பாலிலூறப்போடவும், கடும்பத்தியம்.

### உ - வது மருந்து.

கருவேலன்பட்டை, முருங்கைப்பட்டை, நாவற்பட்டை, இலைவம்பட்டை, ஊஞ்சல்பட்டை, ஓதியம்பட்டை,அத்திப்பட்டைஇவைகளை கரும்புஇரசத்தில் தோய்த்துதோய்த்து இடித்து வகைக்குசாறுபடி-வ, நெல்லிரசம்-உ, பொற்கையான்சாறு-வ, கூரெள்ளெண்ணைநாழி, பசுவெண்ணை நாழி ஒன்றாய்க்கலந்து சித்தரத்தை, தேத்தான்கொட்டை, தாளிசப்பத்திரி, நிலப்பனை,கோரைக்கிழங்கு,கோஷ்டம் தேவதாரம், அமுக்கரா, வெந்தயம், சாதிக்காய், லவங்கப்பத்திரி சாரப்பருப்பு வகைக்குப்பலம்-வ, நிம்பழச்சாற்றால் க-ஜாமம் தேங்காய்ப்பாலாலொருஜாமமாட்டி ஷை எண்ணெயிற்கலக்கி அடுப்பேற்றி மெழுகுபதத்திற் சுண்டக்காச்சி இறக்கி முன்போலச் சுத்திசெய்தபூரம் விரு-கவ-பொடித்துப் போட்டு-உ உச்சிக்கரண்டி வீதம்-ரு-நாளிருபோதுண்ணவும் இச்சாபத்தியம்

க - வது மருந்து.

காரீயம்பலம்-க-உருக்கி இரசம்பலம்-க மத்தித்து இருப்புக்கடாயில்வைத்துமறுபடியுமுருக்கிகருந்துளசிச்சாறுகொஞ்சம்கொஞ்சமாக விட்டு பொற்றலைக்கையான்வேருல் செந்தூரமாகும்வரை தேய்த்து ஷை செந்தூரத்தை தேத்தான்கொட்டைலேகியத்தில்-உ-அரிசிஎடை வைத்து-ரு-நாளுண்ண வெள்ளையென்னும் மேகரோகம் விட்டகலுமென்றறிக, கடும்பத்தியம்.

இரத்தமேகம் வருதல்.

பித்தநாடியானது ஐயத்திலுறைந்து சமன்மாத்திரை கொண்டு அன்னம்போலசைந்துநடக்கில் ஆண்குறித்துவாரமிரணமாகி உதிரப்பிரவாகங்கொண்டு அத்துவாரவழியேவந்தும் கைகால்களசந்தும் குறியில் எரிச்சலும், குத்தலும் பசியில்லாமையும், யாதின்மேல் பிரியப்படாமையும் இடுப்புமுதலிய அவயவாதிகள்நொந்தும் ஆகியகுணங்களோடு இரத்தமேகம்வந்தெய்துமென்றறிக, அன்றி மேற்கூறியவண்ணம் மாதர்களுக்குண்டாகில் பெரும்பாடெனக்கொள்க.

நிவர்த்தி மருந்து.

அடியிற்கூறியபாகத்தைப்போல கல்நார், சிங்கி, பவளம், நாகமென்னுமிந்நான்கையும் தனித்தனிநீற்றிஞ்செய்து ஒன்றாகக்கூட்டி அதில்காசெடையெடுத்து சுத்தஜலத்தில்-எ-விதை அலம்பிஎடுத்த கற்றாழைச்சோற்றிலிட்டு சீனிகூட்டி-ய-நாளுண்ணவும், மாலையில் வெண்ணைகூட்டி யுண்ணவும், இச்சாபத்தியம்.

கல்நார் பற்பம்.

எருமைக்கொம்பு கல்நார்பலம்-உ, ஆவின்கோமயத்தில்-ய-நாளூறப்போட்டுப் பின்கறுஊமத்தைஇலையை தேங்காய்ப்பிரமாணமரைத்து ஷை கல்நாரைஉட்பொதிந்து-ருய-எருவில்புடம்போட்டெடுத்துக்கல்வத்திலிட்டு ஆடுதீண்டாப்பாளைச்சாற்றில்-சு-ஜாமமாட்டி ள-எருவில் புடம்-க ஷை சாற்றால்-உ-ஜாமமாட்டி ளருய-எருவில் புடம்-க-போடநீறும்.

சிங்கியென்னும் மான்கொம்புபற்பம்.

வெள்ளாட்டுச்சாணத்தில் சிறுபிள்ளைகள்சிறுநீர்விட்டுக்கரைத்து சிங்கிபலம்-உ, ய-நாளூறப்போட்டு உய-எருவில்புடம்வைத்தெடுத்துக் கல்வத்திலிட்டுக் கருநொச்சிச் சாற்றால்-சு-ஜாமமாட்டி-உய-எருவில் புடம்-க கழற்சி இலைச்சாற்றில்-உ-ஜாமமாட்டி-ய-எருவில் புடம்-க-போடநீறும்.

பவளபற்பம்.

நிம்பழச்சாற்றில் பவளம் பலம்-உ, ங-நாள்ஊறப்போட்டுப்பின் முசல் இரத்தத்தால்-சு-ஜாமமாட்டி வில்லைசெய்துலர்த்தி ஓட்டில் வைத்து ஓடுமூடிசீலைசெய்து கெஜபுடம்போடநீறும்.

நாகபற்பம்.

இலுப்பையெண்ணெயில்-உக-விசை உருக்கிச்சாய்த்த நாகம்பலம்-உ, வில்வயிலை விளாங்காய்ப்பிரமாணமரைத்து ஷை நாகத்தையுட்பொதிந்து-எ-சீலைவலுக்கச்செய்து ௱-எருவில் புடமிடப்பற்பமாம், அல்லது நாகத்தை அயக்கரண்டியில் வைத்துருக்கி வில்வவேரால் தேய்க்கத் தேய்க்க நீறும்.

உ - வது மருந்து.

சிற்றாமணக்கெண்ணை படி உ, காணிச்சாறு, ஆதண்டைச்சாறு, வல்லாரைச்சாறு, மேனிச்சாறு, கையான்சாறு, வில்வஇலைச்சாறு, அறுகன்வேர்சாறு, வள்ளிச்சாறு, வெங்காயச்சாறு, சாணிச்சாறுவகைக்குப்படி-க கலக்கிப் பின் வெந்தயம், சீரகம், கொத்துமல்லி, சிறுநாகப்பூ, சாதிக்காய், லவங்கம், அதிமதுரம், கூகைநீர், சீனம் வகைக்கு விரா-க, சேர்த்து மெழுகுபதமாக நீர்வற்றக்காச்சி, உச்சிக்கரண்டி வீதம்-உ௰-நாளுண்ணவும், இச்சாபத்தியம்.

ங - வது மருந்து.

நாவல்பட்டை, அத்திப்பட்டை, கலியாண முருக்கன்பட்டை சமன்கொண்டு எருமைமோரில் தோய்த்துத்தோய்த்திடித்துப் பிழிந்தசாறுபடி அரைக்கால், சந்தனத்தூள்பலம் - ௨, நிம்பழச்சாறுபடி அரைக்கால், புளித்தமோர்படி அரைக்கால் இவைகளை ஒன்றுகூட்டி அரைஆழாக்குவீதம்-ரு-நாள் காலையில்சாப்பிட இரத்தமேகரோகம் விட்டகலுமென்றறிக, இச்சாபத்தியம்.

மதுமேகம் வருதல்.

வாதநாடியானது கிறுகிறுத்தயர்ந்து ஐயத்திலுறைந்து ஆமையைப்போன்றுநடக்கில் தேகமிளைத்தல், நாவினித்தல், வயிறுகழிதல், சோம்பல், நித்திரைபங்கம், சிறுநீர் வெண்மைநிறமாயிருத்தல், மலஜலம்விட்ட இடத்தில் ஈஎறும்புகளூறல், நெஞ்சிலிருந்து சளிவிழுந்திடில் உடனே ஈ எறும்புகளூறல் ஆகியகுணங்களோடு வந்தெய்துமாம் மதுமேகரோகமென்றறிக.

நிவர்த்தி மருந்து.

சிறுகுடுவையில் வெடியுப்பு பலம்-க-கொட்டி, அப்ரேக்வைத்து மேலும்முன்போல் வெடியுப்புகொட்டி வாய்புரம்வேளையடைத்து ஓடுமூடி சீலைசெய்து அரைசெஜபுடமிடச்சுண்ணமாம், வெண்ணெயில் அரிசியெடைவைத்து-ம-நாள் காலைமாலையுண்ணவும், கடும்பத்தியம்.

உ - வது மருந்து.

வேப்பெண்ணெயில்-உக விசை உருக்கிச்சாய்த்த வெள்வங்க பலம் க, வேப்பங்கட்டையைத்துளைத்து ஷிவங்கம்வைத்து பிரமை கொண்டுமூடி-எ சீலை வலுக்கச்செய்து-ா-எருவில் புடமிட்டெடுக்க பற்பமாம், வெண்ணெயில்-ம-நாளிருபோதுண்ணவும், கடும்பத்தியம்

ங - வது மருந்து.

கோழிமுட்டைஓட்டைப்பூநீரில்வைத்து சுத்திசெய்து வெள்ளெருக்கம்பாலாலாட்டி சிறுவில்லைகளாக்கி அகலில்வைத்துமேல்மூடி சீலைசெய்து-ௗ-எருவில்புடமிட சுண்ணமாம், மிளகுசூரணத்தில் பணவெடைவைத்து-உம-நாளுண்ண மதுமேகரோகம் விட்டகலுமென்றறிக.

தந்திமேகம்வருதல்.

பித்தாதியானதுதனித்து ஒன்றன்தலை நீட்டிநீட்டிவாங்குவதைப்போல் வாதத்திலுறைந்தும் இருப்பிடஞ்சேர்ந்தும்பேசில் நடுமுதுகுளைவு, மாரடைத்தல்போலிருத்தல், இடுப்புகடுத்தல், மயக்கம்,கீல்களெல்லாம்நோதல், கழுத்துநோதல், கை, கால், மார்பு, அடிவயறு முதலியவை எரிச்சல், அசதி, நித்திரைபங்கம், மனந்தடுமாற்றம், சீரல், சிலவேளை சந்தோஷம், பசியில்லாமை, யாதின்மேலும் பிரியப்படாமை, லிங்கத்துவாரமிரணமாகி எரிச்சல், குத்தல், தினவெடுத்தல், சிறுநீர்விடு முன்னும்பின்னும் தந்திக்கம்பியைப்போல் நீகண்டு வெள்ளைவிழ்தலாகிய குணங்களோடுவந்தெய்துமாம் தந்திமேகரோகமென்றறிக.

நிவர்த்திமருந்து.

அடியிற்கூறிய பாகத்தைப்போல சல்மதம், கல்நார், கற்பூரசிலாசத்து இம்மூன்றையும் நீற்றினஞ்செய்து ஒன்றுபடுத்தியதில்பணவெடைதுக்கி கற்றாழைச்சோற்றில்வைத்துண்ணவும், இச்சாபத்தியம்.

## கல்மதம்.

கல்மதத்தைப்பொடுதலைச்சாற்றில்-௩-நாளூறப்போட்டுப்பலமெடுத்து சுண்ணாம்பில்பொதிந்து ஒருசீலைசெய்து-உ௫-எருவில் புடமிட்டுப்பின் கல்வத்தில்வைத்து வேளைச்சாற்றால்-௪-ஜாமமாட்டி வில்லைசெய்து ஷை சுண்ணத்தில்வைத்து-௫௰-எருவில்புடமிடப்பற்பமாம்.

## கல்நார்.

எருமைக்கொம்பு கல்நாரை ஆவின்கோசலத்தில்-௩-நாளூறப் போட்டுப்பலமெடுத்து தேங்காய்ப்பிரமாணம் கருவூமத்தையும், நல்வேளையுமரைத்து கெஜபுடமிட்டுப் பின்வேளைச்சாற்றில்-௪-ஜாமமாட்டிவில்லைசெய்து சுண்ணாம்பில்வைத்துக் கவசித்துக் கெஜபுடமிடப் பற்பமாம்.

## கற்பூரசிலாசத்து.

கற்பூரசிலாசத்தை துண்டுகளாக்கி நிம்பழச்சாற்றில்-௧-நாளூறப் போட்டுப்பலமெடுத்து இலைகனம் சுண்ணாம்புகவசஞ்செய்து ஒருகுடுவையில்வைத்து முசுமுசுக்கைச்சாறு பொடுதலைச்சாறு வகைக்குப் படி-௨; நறுவுளிகொழுந்து நாரத்தங்காயளவுகரைத்து ஷை குடுவையில்வைத்து மேல்மூடிமூடி சீலைசெய்து-௫௰-எருவில் புடமிடப் பற்பமாம், இம்மூன்றுமொருதொடர்.

## ஆச்சியமேகம் வருதல்.

ஐயநாடியானது மிகக்கொதித்து பித்தத்திலுறைந்து நாகம்போலச்சீறிப்பாய்ந்திடில் மலஜலஞ்சிக்கல், உள்ளங்கைகால் வியர்த்தல், நாவிற்சலமூறல், லிங்கத்துவாரம்பெருத்துக்கடுத்தும் எரிச்சலாகியும் தினவெடுத்தும், நீர்விடுமுன்அல்லது பின் நெய்போலிறங்கலுமாகிய குணங்களோடுவந்தெய்துமாம் மகாகொடிய ஆச்சியமேகரோகமென்றறிக, அப்படி இறங்கியநெய்யை சீலையில்ஊட்டி விளக்கில்கொளுத்தஎரியும்பரீட்சையால் கண்டுகொள்க.

## நிவர்த்தி மருந்து.

ஆலம்விழுது இரண்டுபிடி, பரித்திவேர்த்தோல், அசுவகெந்திக்கிழங்கு, ஆவாரைவேர்ப்பட்டை, வெள்வேலம்பட்டை, நாவற்பட்டை, ரேவல்சின்னிப்பட்டை வகைக்குப்பிடி-௧, பரித்திப்பிஞ்சு, பருத்திப்பருப்பு வகைக்குச் சிரங்கை-௧, ஏலம், அதிமதுரம் வகைக்கு விராகன்-௰, செங்கழுநீர்க்கிழங்கு, கோஷ்டம், கிராம்பு, ஜாதிக்காய்,சாதிபத்திரி வகைக்குவிராகன்-௫, திப்பிலிவிராகன் ௪, பொரிகாரம், ஜாதிலிங்கம்

வகைக்கு விரா-உ, முந்திரிகைப்பழம், தேன்மெழுகு வகைக்குப் பலம் ௨, பேரீச்சம்பழம் விரா-அ, நெரிஞ்சிக்காய் எலுமிச்சைஅளவு இவைகளை ஆவின்பாலாலாட்டி நாழிஆவின்பாலிற் கரைத்து அதில் நெல்லிக்காய்ச்சாறுநாழி-௪, ஆவினெய்நாழி ௩, ஒக்கவிட்டுக்காச்சிக் கிருதமாகச்செய்து நாளொன்றுக்கு மாகாணிப்படிவிதமுண்ணவும், இச்சாபத்தியம்.

உ - வது மருந்து.

துளசிச்சாறு, இஞ்சிச்சாறு, கையான்சாறு, வேளைச்சாறு, நக்காளிச்சாறு, வீழிச்சாறு, பிரண்டைச்சாறு, அத்திப்பட்டைச்சாறு, வேப்பம்பட்டைச்சாறு, நுணாச்சாறு, சின்னியிலைச்சாறு, நற்சங்கன் சாறு, மேனிச்சாறு, கலவைச்சாறு நிம்பழச்சாறு வகைக்குப்படி-௪, ஆவினெய்வீசை-௨, ஆவின்பால்படி-௨ இவைகளை ஒன்றுபடுத்திப் பாண்டத்திலிட்டு சீரகம், ஏலரிசி, திப்பிலி, கடுகுரோகணி, விளங்கம், மதுரம், கோஷ்டம், கடுக்காய் வகைக்குப்பல மொன்றுசேர்த்து நீர்வற்றக்காச்சி இறக்கிப் பூரம் விரா உ௨, பொடித்துப்போட்டு உச்சிக்கரண்டி-உ-வீதம்-உ௰-நாளிருபோதுண்ணவும் கடும்பத்தியம்.

௩ - வது மருந்து.

சித்தாமணக்கெண்ணெய் படி-க, முள்ளங்கி, வெள்ளறுகு, கற்றாழை, வல்லாரை, தாளி, பூவரசன்பட்டைச்சாறு வகைக்குப்படி-க, அத்திப்பால், ஆவின்பால் வகைக்குப்படி-க, கோஷ்டம், மதுரம், சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலரிசி, சடாமாஞ்சி, வெந்தயம், பரங்கிச்செக்கை ரோகணி, வால்மிளகு, கடுக்காய்ப்பிஞ்சு, சிறுதேக்கு வகைக்குப்பலம்-க-பொடித்து செவ்விளநீரால் மைபோலாட்டி ஷை எண்ணெயும், சாறும்பாலும் ஒன்றுபடுத்தி யதில்கரைத்து நீர்வற்றக் காச்சி கால்கரண்டிவீதம்-௪௰-நாளிருபோதுண்ண மகாகொடிய ஆச்சியமேகரோகம் விட்டகலுமென்றறிக, கடும்பத்தியம்.

மேகரோகங்கள்-உக-க்கும் பொது அவுஷதங்கள்.

மிளகறணை, வெள்ளைச்சாரணைவேர், முந்திரிகைவேர், முருங்கை, வேம்பு, கற்றாழை, வள்ளி, சிந்தில் கட்டுக்கொடி கரிசலாங்கண்ணி, பொன்னாங்கண்ணி, அமுக்கரா, சங்கங்குப்பி, நீர்பூலா, விழுதி, நிலப்பனைவேர், அழிஞ்சில்பட்டை, சிறுவிளா, வெள்ளறுகு, வல்லாரை, ஆவாரை, முடக்கொத்தான், அகத்திவேர் வகைக்குப் பலம் ௰, வெந்தயம், சீரகம்வகைக்குப்பலம்-அ இவைகளைக் கல்லுர

வகைக்கு விரு-௨, முந்திரிகைப்பழம், தேன்மெழுகு வகைக்குப்
பலம் ௨, பேரீச்சம்பழம் விரு-௮, நெரிஞ்சிக்காய் எலுமிச்சை அளவு
இவைகளை ஆவின்பாலாலாட்டி நாழி ஆவின்பாலிற் கரைத்து அதில்
நெல்லிக்காய்ச்சாறுநாழி-வ, ஆவினெய்நாழி ௩, ஒக்கவிட்டுக்காச்சிக்
கிருதமாகச்செய்து நாளொன்றுக்கு மாகாணிப்படி விதமுண்ணவும்,
இச்சாபத்தியம்.

௨ - வது மருந்து.

துளசிச்சாறு, இஞ்சிச்சாறு, கையான்சாறு, வேளைச்சாறு, நக்
காளிச்சாறு, விழிச்சாறு, பிரண்டைச்சாறு, அத்திப்பட்டைச்சாறு,
வேப்பம்பட்டைச்சாறு, நுணாச்சாறு, சின்னியிலைச்சாறு, நற்சங்கன்
சாறு, மேனிச்சாறு, கலவைச்சாறு நிம்பழச்சாறு வகைக்குப்படி-வ,
ஆவினெய்வீசை-௨, ஆவின்பால்படி-௨ இவைகளை ஒன்றுபடுத்திப்
பாண்டத்திலிட்டு சீரகம், ஏலரிசி, திப்பிலி, கடுகுரோகணி, விளங்
கம், மதுரம், கோஷ்டம், கடுக்காய் வகைக்குப்பல மொன்றுசேர்த்து
நீர்வற்றக்காச்சி இறக்கிப் பூரம் விரு ௨ ௨, பொடித்துப்போட்டு உச்
சிக்கரண்டி-௨-வீதம்-௨௰-நாளிருபோதுண்ணவும் கடும்பத்தியம்.

௩ - வது மருந்து.

சித்தாமணக்கெண்ணை படி-௧, முள்ளங்கி, வெள்ளறுகு, கற்று
ழை, வல்லாரை, தாளி, பூவரசன்பட்டைச்சாறு வகைக்குப்படி-௧,
அத்திப்பால், ஆவின்பால் வகைக்குப்படி-௧, கோஷ்டம், மதுரம்,
சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலரிசி, சடாமாஞ்சி, வெந்தயம், பர
ங்கிச்செக்கை ரோகணி, வால்மிளகு, கடுக்காய்ப்பிஞ்சு, சிறுதேக்கு
வகைக்குப்பலம்-௧-பொடித்து செவ்விளநீரால் மைபோலாட்டி ஷை
எண்ணையும், சாறும்பாலும் ஒன்றுபடுத்தி யதில்கரைத்து நீர்வற்றக்
காச்சி கால்கரண்டிவீதம்-௪௰-நாளிருபோதுண்ண மகாகொடிய ஆச்
சியமேகரோகம் விட்டகலுமென்றறிக, கடும்பத்தியம்.

மேகரோகங்கள்-௨௧-க்கும் பொது அவுஷதங்கள்.

மிளகறுணை, வெள்ளைச்சாரணைவேர், முந்திரிகைவேர், முருங்
கை, வேம்பு, கற்றாழை, வள்ளி, சிந்தில் கட்டுக்கொடி கரிசலாங்
கண்ணி, பொன்னாங்கண்ணி, அமுக்கரா, சங்கங்குப்பி, நீர்பூலா,
விழுதி, நிலப்பனைவேர், அழிஞ்சில்பட்டை, சிறுவிளா, வெள்ளறுகு,
வல்லாரை, ஆவாரை, முடக்கொத்தான், அகத்திவேர் வகைக்குப்
பலம் ௰, வெந்தயம், சீரகம்வகைக்குப்பலம்-௮ இவைகளைக் கல்லுர

நாகபற்பம்.

வேப்பெண்ணெயில் உக-விசை உருக்கிச்சாய்த்த சிறுகண்ணுகம் பலம் ஒன்றைதகடதாக்கி வேளையை விளாங்காய்ப்பிரமாண மறைத்துக் கவசித்து சுண்ணும்புபொதிந்து எழுசீலைசெய்து முழுப்புடம்போட நீறும்.

சு - வது மருந்து.

சொவ்வைச்சாறு, காணி, வல்லாரை, செருப்படை, ஆனைநெருஞ்சி சீந்தில்தண்டு, அரசன்பட்டைசாறு வகைக்குப்படி-உ, சித்தாமணக்கெண்ணெ, எள்ளெண்ணெ வகைக்குப்படி-ஐ, ஒன்றுபடுத்தி சாதிக்காய், சாதிபத்திரி மாசக்காய், கற்கடகச்சிங்கி, சண்பகப்பூ,காட்டாத்திப்பூ, சிறுநாகப்பூ, ஏலம், குராசானி, திப்பிலி வகைக்குக் கழஞ்சி-உ இவைகளை ஆவின்பாலாலாட்டி ஷை எண்ணெயிற்கலக்கிஅடுப்பேற்றி மெழுகுபதமாகக்காச்சி கற்கண்டுபலம்-ரு பொடித்துப்போட்டு உச்சிக்கரண்டி ஒன்றுவீதம் ஒருமண்டலம்கொள்ளவும், இச்சாபத்தியம்.

ரு - வது மருந்து.

சித்தாமணக்கெண்ணெ, ஆவிநெய் வகைக்குப்படி க, விழுதிச்சாறுபடி-க-சேர்த்து சுக்கு, மிளகு, திப்பிலி, வசம்பு ஈருள்ளி, கோஷ்டம், லவங்கம் ஏலம், வெள்ளுள்ளி, வகைக்குப்பலம்-வ ஆவின்பாலாலாட்டி ஷை நெய்யிற்கரைத்து அடுப்பேற்றி மெழுகுபதமாகக்காச்சி வ-ஆழாக்குவீதம்-ந-நாள் கொள்ளவும், பத்தியம் உப்புமுதலியவை தள்ளவும்.

சா - வது மருந்து.

இலுப்பெண்ணெயில்-உக - விசை உருக்கிச்சாய்த்த கருவங்கம் பலம் ஒன்றைத் தகடதாக்கி தாளகம், இரசம் வீரம் அண்டோடு வகைக்கு விரு-க. வாய்நீரால்மத்தித்து ஷை தகட்டிற்குப்பூசிசுண்ணம்புக்குள்பொதிந்து சிறுகுடுவையில்வைத்து-எ-சீலைசெய்து செஜபுடம்-உ-போடவும் நீறும். இதைசிரகலேகியத்தில் உ-அரிசிஎடைவைத்துண்ணவும், கடும்பத்தியம்.

எ - வது மருந்து.

மிளகுபலம் க, கசகசாபலம் உ, வால்மிளகு பலம்-க பொன்வறுப்பாக்கிச்சூரணித்து ஆவின்பால் பலம் உ, சர்க்கரைபலம் ரு-சேர்த்துப்பாகுசெய்து ஷை தூள்கொட்டிக்கிண்டி இறக்கிதேன்பலம்- உ சேர்

த்து கொட்டைப்பாக்களவு லேகியஞ்செய்து ஷ வங்கபற்பய யெடைவைத்துண்ணவும், மேகரோகங்கள் உக-ம் நீங்குமென்றறுன்,

மற்றையமேகரோகத் தொகைகளையும், நாடிசிதானங்களையும், வியாதிக்குறிகளையும், அவுஷதபாகங்களையும், சுத்திவகைகளையும்,பத்தியகிரமங்களையும், க-ம் பாகம், உ-ம்பாகம், ங-ம் பாகயாக முறைமுறையே அச்சிடுவோமாக.

அன்றி இந்நூலிற்கூறியவைகள்போக மற்றையஅதிசாரரோகம், கிராணிரோகம் பிரமியரோகம், பாண்டுரோகம், சோபைரோகம், மகோதரரோகம், விஷபாகரோகம், பெரும்பாடுரோகம், உளைமாந்தரோகம், சல்லடைப்புரோகம், விற்புருதிரோகம், கரப்பன்ரோகம், பவுத்திரரோகம் சன்னிரோகம், நேத்திரரோகம், வலிரோகம், வைசூரிரோகம், பீநிசரோகம், சிரரோகம், தாகரோகம், விக்கல்ரோகம், சுவாசரோகம் வாந்திரோகம், மார்புரோகம், கம்மல்ரோகம், ஆண்குறிரோகம், பெண்குறிரோகம், மலட்டுரோகம், சாமளாரோகம், பாலரோகம் ஆகிய ரோகத்தொடுப்புகளும் அதுகளில் கிளைரோகசம்மந்தங்களும் நாடியிலக்கணமும் அந்தந்தநாடிநடைகளுக்கேற்ற வியாதிக்குறிப்புகளும், அவுஷதபாகங்களும்,சுத்திசெய்யும்வகைகளும் பத்தியகிரமவரிசைகளும் முறைமுறையேசொல்லப்படுமாகையால் மேகரோகம்வரையிலெழுதலாயினோம்.

ஏனெனில் சசசஅ-வியாதித்தொகுப்புகள்யாவும் ஓர்நூலாகவச்சிடுவோமாகில் சுமார்-உா-பாரமடங்கிய புத்தகமாகுமானதால்நம்மைப்போன்ற எளியவர்கள் அதிகவிலைகொடுத்துவாங்கவரிதெனச்சிந்தித்து மூன்றுபாகங்களாக வகுக்கலாயினோம்.

இனிவியாதிரூபங்களுக்குத் தனித்தனி அவுஷதங்களும், தக்க அநுபானங்களும், சுத்திசெய்யும் விவரங்களும் பத்தியபாகங்களும் சிலதுசொல்லுவோமாக.

## சகலரோகங்களுக்கும் குளிகைவகைகள்.



### கோடாசூரிக்குளிகை.

சுத்திசெய்த இரசம், கெந்தகம் வெண்காரம், லிங்கம், தாளகம், மனோசிலை, கருநாபி, இந்துப்பு சூடன், சுக்கு,மிளகு, திப்பிலி. நெல்லிக்காய், தான்றிக்காய், கடுக்காய், அக்கிராகாரம், கருஞ்சீரகம், சித்

திரமூலம், சுடுகுரோகணி வகைக்கு விரு௧ வாளம் விரு ௫, சித்தா மணக்குபருப்பு விரு ௫ இவைகளையொன்றுபடுத்திக்கல்வத்திலிட்டுஅவு ரிச்சாரில் மூன்றுநாள் மூன்றுஜாமம், கையாந்தகரையில்-கூ-ஜாமம் நிம்பழத்தில்-௩-ஜாமமாட்டி மிளகளவுகுளிகைகட்டிநிழலுலர்த்திவை த்துக்கொள்ளவும்

ஷை குளிகைக்கு அநுபானங்களும்
தீரும்வியாதிகளும்.

ஷை குளிகை இரண்டை ௫-நாளிருபோது தயிரில்தாக்க செரி யாமந்தமும், ஊமத்தைச்சாற்றில் சன்னிசயித்தியம் சுரமும், டசளைச் சாற்றில் சுரோணிதவாதமும், சாதிக்காய்ப்பொடியிற்கொள்ள இரத் தக்கழிச்சலும் சீரகச்சூரணத்தில் மூலமும்தீரும், நற்கோவைச்சாற் றில்கொடுக்கத் தாதுவிர்த்தியுமுண்டாம், பசுநெய்யிற்கொள்ள கிரா ணிக்கழிச்சலும் தீரும். ஆமணக்கெண்ணெயிற் கொடுக்க விரோசன மாகும், பாம்பு, தேள்முதலிய விஷந்தீண்டியவிடத்தில் உமிழ்நீரா லு ரைத்துப்போட விஷம்நீங்கும், சீனியிற்கொள்ளப் பொருமல்தீரும், கஞ்சாசாற்றிலுண்ணக்காலெரிவுநோவுதீரும். நொச்சிச்சாற்றிலுண்ண பதினெண்பிரமியமும்தீரும், வெள்ளாட்டுப்பாலிற்கொள்ள மேகநோய் தீரும், பழச்சாற்றிலுண்ண செவ்வட்டைக்கடிநீங்கும் தகரைச்சாற் றிலுண்ண தீபனமுண்டாம், மேற்சுவாசம்தீரும், தேனிற்கொள்ளசரீர மினைக்கும், புளியங்கொட்டையை ஊறவைத்த தண்ணீரிற்கொள்ள உஷ்ணமுண்டாம், வெற்றிலையிலுண்ண முகவசீகரமுண்டாம், காலை யில் வெற்றிலைப்பாக்கிற்கொள்ள பயித்தியநோயகலும், திரிகடுகுச்சூர ணத்திற்கொள்ள நெஞ்சுகட்டுத்தீரும், முருங்கைச்சாற்றில்நெய்கலந் துண்ண அட்டகுன்மம்போம், சீரகச்சூரணத்தில் சீனிகலந்து ஷை குளிகையைவைத்துண்ண ஊஷ்ணகார்தலகலும், தண்ணீர்விட்டான் நன்னாரிக்கியாழத்திலுண்ண நீரொழுக்குதீரும், நொச்சிச்சாற்றில் வா தசுரமும், சுக்குகியாழத்தில் பித்தசுரமும், இஞ்சிச்சாற்றில் திரிகடு குப்பொடிகலந்து குளிகைவைத்துண்ண ஐயசுரமும் நீங்கும், கண் ணில்வாய்நீராலுரைத்துதிட்ட பேய்ஓடிப்போம், வெந்நீரிற்கொள்ள தீபனமுண்டாம மேற்கூறிய அநுபானங்கள் தவரிடாவண்ணஞ்செய் யில் நோய்கள்வீடுவிட்டுக் காடுறையுமென்றறிக, கடும்பத்தியம்.

வச்சிரகோடாசூரிக்குளிகை.

சுத்தித்தநாபி, இருவி, இரசம், கெவுரி, கெந்தி, லிங்கம், வெள்ளைப்பா ஷாணம், வெண்காரம், வங்காளப்பச்சை, தாளகம், திரிபலை, திரிகடுகு,

அக்கிராகாரம், வாளம்வகைக்குப்பலம்-ச கல்வத்திட்டு கையான்சாறு, துளசிச்சாறு, நொச்சிச்சாறு, நிம்பழச்சாறு இவைகள் சமன்கொண்டு கஉ-ஜாமமும்,வெற்றிலே ா,பாக்கு-டும் இடித்த ரசத்தைவிட்டு-ஈ-ஜாமமும், வெள்ளாட்டுப்பாலில்-ஈ-ஜாமமுமாட்டிப் பயறளவு குளிகை செய்து நிழலுலர்த்திவைக்கவும்.

அநுபானம்.

ஷை குளிகை இரண்டை-எ-நாளிருபோது முலைப்பாலில்கொடுக்க சுரமும், சீரகச்சூரணத்தில் பித்தசுரமும், ஓமச்சூரணத்தில் அக்கினிமந்தமும், ஆவினெய்யில் சூலையும், முருங்கைச்சாற்றில்வாய்வும், ஆடாதோடைச்சாற்றில் நெய், தேன், திரிகடுகுகூட்டிகுளிகைவைத்துண்ண இருமலும், சுக்கு, மிளகு, சூரணத்தில் ஊஷ்ணமும்போம். மாதுளங்காய், வில்வக்காய், தான்றிக்காய், கடுக்காய் இவைகளை சமன்கொண்டு எருமைமோரிலாட்டி தூதுளங்காய்ப்பிரமாணத்தில் குளிகைவைத்துண்ண வயிர்கடுப்புபோம், கோஷ்டம். கிராம்பு, ஆனைத்திப்பிலி, சித்தரத்தை, மதுரம் வகைக்கு விரு-க. தேங்காய்ப்பாலிலாட்டி-ஈ-குளிகைவைத்துண்ண கெற்பவிற்புருதிபோம், வில்வச்சாற்றில் குன்மம்போகும் ஊமத்தைச்சாற்றிவிட பயித்தியநோயகலும் ஈா-குடம் நல்லஜலம் சிரசிலூத்தவும், கடும்பத்தியம்.

சுரங்களுக்கு ஏலாதிக்குளிகை.

ஏலம்; லவங்கம், மதுரம். நன்னாரி, தாளிசப்பத்திரி, தேவதாரம், மாசக்காய், சந்தனம், இலுப்பைப்பூ, தீவதாட்சிப்பழம், பேரீச்சம்பழம், உருத்திராட்சம். கோரோசனை வகைக்கு விருகஙெ-க, கடுகுரோகணி விரு-மிஈ கல்வத்திலிட்டு இளநீர்விட்டு இரண்டுஜாமமறைத்துக் குன்றிக்காயளவு குளிகைசெய்து நிழலுலர்த்திவைக்கவும் புளிதள்ளவும்.

அநுபானம்.

ஷை குளிகை இரண்டை-எ-நாளிருபோது இளநீர் ஜலத்திலூட்ட தாபசுரம், ஊஷ்ணசுரம், அதிசாரசுரம், நாவரட்சிசுரம் பழையசுரம், முறைக்காச்சல்போம், முலைப்பாலில்தீட்ட தோஷசுரம்தீரும், நீராகாரத்திலிட உஷ்ணகாந்தல் சுரம்நீங்கும், பரங்கிச்செக்கை கியாழத்தில் குளிகையைத்தீட்ட கணச்சுரம் நிவர்த்தியாம், பத்தியம் புளிதள்ளவும்.

## மிருதாதிகுளிகை.

கோரைக்கிழங்கு இருவேலி நன்னாரி, விலாமிச்சு, திரிபலை, கருடப்பச்சை, அகில், தேவதாரம், தாளிசம், கல்நார், தக்கோலம், கோஷ்டம், சண்பகப்பூ, கோரோசனை, பச்சைகற்பூரம், மதுரம், ஏலம், லவங்கம் இவைகளைச் சமன்கொண்டு இளநீரால்-௬ ஜாமமாட்டி மிள களவு குளிகைசெய்யவும், இச்சாபத்தியம்.

## அநுபானம்.

ஷை குளிகை இரண்டை-ம-நாளிருபோது சீரகக்கியாழத்திலு ண்ண பித்தசுரமும், தேனில் வாதசுரமும் இஞ்சிச்சுரசத்தில் ஐயசுரமும், பஞ்சதீபாக்கினிச் சூரணத்தில் தொந்தசுரமும் விட்டோடிப் போம், பத்தியம் புளிதள்ளவும்.

## வசந்தகுலமகாரசக்குளிகை.

லவங்கம், திப்பிலி, கோஷ்டம், அக்கிராகாரம், அதிமதுரம், வெண்காரம், லிங்கம், இரசச்செந்தூரம் வகைக்கு விரு-க, வெங்காரத்தைப் பொரித்துக்கொள்ளவும், முதல்லிங்கமும் இரசச்செந்தூரமும் முலைப்பாலில்சற்று அரைத்துப் பிறகுமற்றையமருந்துகளைப்போட்டு இஞ்சிரசம்விட்டு இரண்டுஜாமமரைத்து கோரோசனைக் குங்குமப்பூ, பச்சைகற்பூரம் வகைக்கு விரு உ கூடப்போட்டு நிம்பழச்சாத்தாலாட்டி சிறுபயறளவுகுளிகைசெய்து நிழலுலர்த்திவைக்கவும்.

## அநுபானம்.

ஷை குளிகை இரண்டை-எ-நாளிருபோது லவங்கம் திப்பிலியைப்பொடித்து தேன்கூட்டிவைத்துண்ண சீதளம், வாய்வு, சுரம் நீங்கும் முலைப்பால், துளசிச்சாறு, தேன்சமன்கூட்டி மாத்திரையை வைத்துண்ண விடாசுரம்போகும், பத்தியம் புளிதள்ளவும்.

## கோரோசனைக்குளிகை.

செண்பகப்பூ, விலாமிச்சு, கோஷ்டம், ஏலம் கோரோசனை, சாத்திரபேதி, மதுரம், வெட்டிவேர்வகைக்கு களஞ்சி-க, தண்டுச்சாற்றில் உ-ஜாமமாட்டி குன்றியளவு குளிகைசெய்யவும்.

## அநுபானம்.

ஷை குளிகைஇரண்டை முலைப்பாலில்தாக்க வாதசுரமும், தேனில் இஞ்சிரசத்தில் பித்தசுரமும், கொடிவேலிக்கியாழத்தில் சிலேத்துமசுரமும்போகும், இச்சாபத்தியம்

{ இரப்பு, சுவாசம், இருமல், ஈளை, காசத்திற்கு திப்பிலிக்குளிகை. }

திப்பிலி பலம்ஒன்றை அரைஆழாக்கு எருக்கம்பாலிலூறப்போட்டு சுண்டும்வரையில் ரவியில்வைத்துப் பின்னூமத்தைக்காயில்விரை நீக்கி ஷெடி மருந்தைவைத்துமூடி ஆவின்சாணத்தால் கவசஞ்செய்து புடம்வைத்துக் காய்கருகினபதத்தில்தள்ளி உள்ளிருக்கும் மருந்தை யெடுத்து தேன்விட்டரைத்து குன்றியளவு குளிகைசெய்து-ம௦-நாட் சென்றபின் ஒருமாத்திரைவிதம் அந்தி சந்தி தேன், மூலைப்பால்,இஞ்சிச்சுரசம் இவைகளில் சாப்பிட இரைப்பு, சுவாசம், இருமல், ஈளை, காசம் முதலியவைநீங்கும், இச்சாபத்தியம்.

பேதிக்குபூபதிக்குளிகை.

இரசம், கெந்தகம், வெண்காரம், சுக்குவகைக்குக் களஞ்சி-க வாளம்கழஞ்சி-ச இவைகளைக்கல்வத்திலிட்டு குளுந்தநீரில்-உ-ஜாமமாட்டி பயறளவு குளிகைசெய்யவும், இச்சாபத்தியம்.

சுத்திவகைகள்.

சூதத்தை வெந்நீர்விட்டரைக்கவும், கெந்தியை ஆவின்பாலிலுருக்கிச்சாய்க்கவும், வெண்காரத்தைச்சாணத்திலும், வாளத்தைமூளை நீக்கி உப்பு, புளி, மிளகாயில் கொதிக்கவைத்து விளக்கெண்ணையில் வதக்கவும், சுத்தியாம்.

விரேசனத்திற்கு வாலசஞ்சீவிக் கறுப்புகுளிகை.

வெண்காரம், நெல்லிகெந்தி, இரசம், சுக்கு இவைகள் ஓரிடையாயெடுத்து வாளம் நாலிடைசேர்த்துப் பொற்றலைக்கையான்சாற்றால் உ ஜாமமாட்டி மிளகளவுகுளிகைகட்டவும் முன்போலச் சுத்திசெய்யவும்.

விரேசனத்துக்கு லிங்கக்குளிகை.

நேர்வாளம் பலம்-க, சீலையில்பொட்டணங்கட்டி சுத்தஜலத்தில் ௩௰-நாழிகை ஊறப்போட்டு நஞ்சுபோக்கி மூலைப்பாலி லூறவைத்த ஜாதிலிங்கம் பலம் ௨,வெண்காரம் பலம் ௨,கடுக்காய்த்தோல் பலம்-வ ஒன்றுபடுத்தி கல்வத்திலாட்டிமெழுகுபதமாய்வரும்போது மிளகளவு வுண்டைசெய்து நிழலுலர்த்தி அநுபான மறிந்துகொடுக்க விரேசனமாகும், இச்சாபத்தியம்.

சித்தானந்த வயிரவக்குளிகை.

சுத்திசெய்த இரசம், நாபி, இணங்கன் வகைக்குப்பணவெடை இங்கிலியம்-ச பணவெடை வாளம்-அ-எடை இவைகளை இஞ்சிச்சாற்றிலோர் சாமமாட்டி உளுந்துப்பிரமாணம் குளிகைசெய்யவும்.

அநுபானம்.

ஷை குளிகையை இஞ்சிச்சாற்றிலும், தேன், நெய், சுக்கு கியாழத்திலுமிட விஷசுரம், சூலை, குடல்வாதம், மலபந்தம், பாண்டு, பீலிகை, வாய்வுமுதலிய ரோகங்கள் விட்டோடிப்போம், கடும்பத்தியம்

காயமாத்திரை.

சுத்திசெய்த சாதிலிங்கம், பெருங்காயம், நாபி, வெண்காரம், மிளகு வகைக்குக்களஞ்சி-க, வாளம் களஞ்சி-ரு இவைகளைக் கற்றாழைச்சாற்றாலாட்டி மிளகளவு குளிகைசெய்துலர்த்திடவும்.

அநுபானம்.

இஞ்சிச்சாற்றிலும் கருப்புக்கட்டியிலுமுண்ண சுரங்கள், அதிசாரம், சீதசுரம், தாபசுரம், வாதபித்தசுரம், குளிர்சுரமியாவும்விட்டோடிப்போம். பத்தியம் புளிதள்ளவும்.

சன்னிகுளிகை.

சுத்திசெய்த இரசம் நாபி, பாஷாணம், லிங்கம், அரப்பொடி, நீமுறுவல் சமன்கூட்டி இஞ்சிச்சாற்றாலாட்டி பயறளவு குளிகைசெய்துவைக்கவும்.

அநுபானம்.

ஷை குளிகையொன்றை வெள்ளைப்பூண்டுதயிலத்தில்தாக்க சன்னி மகூ, பிறவீச்சு, உட்குத்து, குதிரைவலி, வாய்வு, பிறநோய் முதலியவைபோம், கடும்பத்தியம்.

கன்னிகை சிந்தாமணிக்குளிகை.

வெண்காரம், லிங்கம், நாபி, காயம்வகைக்குச் சமனெடைகொண்டு வாளம் எடை-ச இவைகளைக் குமரிச்சாற்றாலாட்டி மிளகளவு குளிகைசெய்யவும்.

அநுபானம்.

ஷை குளிகை ஒன்றை இஞ்சி, தேன், முலைப்பால், திரிகடுகில் தாக்க பக்கசூலை, கெற்பசூலை, மண்டைசூலை, மலபந்தம்முதலியரோகங்கள்போகும், கடும்பத்தியம்.

முச்சுரத்திற்குப் பச்சைகுளிகை.

துத்தம், நாபி, கெந்தகம், சூதம், காரம், அரிதாரம் இவைகளைச் சமன்கொண்டு காக்கணச்சாற்றில்-ரு-ஜாமமாட்டி உளுந்தளவுகுளிகை செய்யவும்.

அநுபானம்.

௴ குளிகையொன்றை முலைப்பால், சீனி மிளகு, சுக்கு, தேன், இஞ்சிச்சார் இவைகளில்தாக்க மாறல்சுரம், குளிர்ச்சுரம், நளிர்ச்சுரம், சன்னிசுரம், பித்தசுரம், சிலேத்துமசுரம் வாதசுரம், முறைச்சுரம், விடாச்சுரம் முதலியவைபோம், சுடும்பத்தியம்.

திரிலோகச்சிந்தாமணிக்குளிகை.

சீமைஇரசபற்பம் விரு ௬, இரசகற்பூரம் விரு-க, இரசச்செந்தூரம் விரு க சீமைகாவிக்கல் விரு-க இவைகளைப் பசளைச்சாற்றால் ௬-ஜாமமாட்டிப் பின்விளாம்பிசின்ஊறவைத்த ஜலம்விட்டொருஜாமமறைத்து சிறுபயறளவு உண்டைசெய்யவும்

அநுபானம்.

௴ குளிகையொன்றைபனைவெல்லத்தில்வைத்துண்ணவாய்வு,மலபந்தம், கெற்பஸ்திரீகள் வயற்றில்தங்கியஅழுக்கு, சன்னிசூலை, குன்மம், பித்தவாய்வு முதலியவைபோகும், சுடும்பத்தியம்.

புண்கிரந்திக்குக் கருந்துளசிக்குளிகை.

வெண்காரம் விரு-ரு,சட்டியிலிட்டு உருகிறபோது பூரம் விரு-க, இரசச்செந்தூரம் விரு-ஙு பொடித்து உருகிநிற்கும்வெண்காரத்திற்போட்டு நீர்வற்றியபின்னெடுத்துக் கல்வத்திலிட்டு ஓமம் பலம்-உ சற்றுவறுத்து கருந்துளசி இலைபலம்-உ போட்டு நிம்பழச்சாற்றால் நெகிழவரைத்து தூதுளங்காய்ப்பிரமாணம்குளிகைகட்டி-ரு-அலைது ரு-நாளந்திசந்திகொடுக்க புண், கிரந்தி, மேகவாய்வு, கொறுக்குபாரிசவாய்வுமுதலியவைநீங்கும் பத்தியம் புளிபுகைதள்ளவும், சீக்கிரம் வியாதிபோக வெந்நீறுஞ்சாதமுண்ணவும், வாய்பிடிக்கவேணுமென்றால் இரசச்செந்தூரம் விரு அரையாகச்சேர்க்கவும்.

மேகப்புண்கிரந்திக்குப் பூரக்குளிகை.

பூரம், சித்திரமூலவேர்ப்பட்டை, ஓமம், பனைவெல்லம் இவைகளைச்சமன்கொண்டு ஒருஜாமமாட்டி மிளகுப்பிரமாணம் குளிகைசெய்து குளிகை ஒன்றுவீதம்-ம-நாளிருபோதுண்ண வெள்ளை, கிரந்தி, கொறுக்கு, புத்துமுதலியவைபோம், சுடும்பத்தியம்.

மேகவாய்வினால் கைகால்பிடிப்புக்கும் மேகங்காண்கிறவர்களுக்கும் இரசக்குளிகை.

வாலைரசம் பலம்-க, கெந்தி பலம்-உ, இரசபற்பம் பலம்-உ,பூரம் பலம்-க; மிளகு பலம்-க இவைகளைநிம்பழச்சாற்றிலாட்டி கடலைப்பிரமாணம் குளிகைசெய்து-கூ-நாளிருபோதுண்ணவும், சுடும்பத்தியம்.

### வேறுபூரக்குளிகை.

பூரம்-விரா-க, கரண்டியில்கொஞ்சம்நெய்விட்டு பூரத்தைப்போட்டுக்காச்சி பற்றியெரிகிறசமயத்தில் ஷை பூரத்தைப் பிரட்டிக்கொடுத்துவரவும் ஆறியபின்கீழ்சாய்த்து அலம்பிப்போட்டுக் கல்வத்திலிட்டு லவங்கம் விரா-உ-சேர்த்து நிம்பழச்சாறுவிட்டரைத்து-௬௰-குளிகை செய்து அந்திசந்தி ஒவ்வொரு குளிகைசாப்பிட மேகம், கிரந்தி, வெள்ளை, கொறுக்குமுதலியவைபோகும், பத்தியம்-புளிபுகை புலால் நீக்கவும்.

### தாளகக்குளிகை.

காட்டுத்தாளகம் பலம்-க, சுக்குபலம்-க, கிளிஞ்சில் சுண்ணம் பலம் அரைக்கால் இவைகளைநெகவரைத்துச்சட்டியிற்போட்டு அரை ஆழாக்கு எருமைச்சாணிப்பால்விட்டுக் குழைத்துக் கொதிப்பித்து சுண்டினபின்வறுத்தெடுத்து மறுபடியரைத்துசெம்பருத்திச்சாறுபடி கொதிக்கவைத்து வறுத்தெடுத்தரைத்து துளசிச்சாறுவிட்டுக்கொதிப்பிட்டுவறுத்தெடுத்தரைத்து கஞ்சாங்கோரைச்சாறுவிட்டுக் கொதிப்பித்து வறுத்தெடுத்தரைத்து கம்மாறுவெற்றிலைச் சாறுவிட்டுக்கொதிப்பித்து வறுத்தெடுத்தரைத்துகுன்றியளவுண்டைசெய்துமுலைப்பால் பணவெட்டு சீரகச்சூரணத்தில் வைத்துண்ண நளிர்ச்சுரம், மாறல் சுரம், நாட்சென்றசுரம் விடாச்சுரம்முதலிய சுரரோகங்கள்விட்டோடிப்போம் பத்தியம்-கருவாடு, கத்திரிப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, மிளகுநீர் புளியிட்டுச்சமைத்துக்கூட்டவும், அரைக்கீரை, நல்லெண்ணை, பூண்டு, கடுகு, சீரகம் நீக்கவும்.

ஷை மருந்தை சாறுவகைக்கு அரை ஆழாக்குவீதம் கூட்டிக்கொதிப்பிக்கவும்.

### கெவுரிக்குளிகை.

கெவுரிபாஷாணம், கெரிவிஷம், சாதிக்காய், குங்குமப்பூ, வாளம் வகைக்கு விரா-க, கல்வத்திலிட்டு மந்தஞ்சாறுவிட்டு ஒருஜாமமரைத்து சிறுபயறளவு குளிகைகட்டி நிழலுலர்த்திவைக்கவும்.

### அநுபானம்.

ஷை குளிகைஒன்றை முலைப்பாலில்தாக்க சகலவிஷசுரங்களும் விட்டோடிப்போம் பத்தியம் புளிகூட்டவும்.

### சுராமடாணக்குளிகை.

நெல்லிகெந்தி பலம்-உ எலிபாஷாணம் பலம்-க ஊமத்தைச் சாற்றுல்-க-நாளாட்டிப் பின்நிம்பழச்சாற்றுல்-உ-ஜாமமாட்டவும் சிறுபயறளவு குளிகைசெய்யவும்.

அநுபானம்.

முலைப்பால், சர்க்கரை, தேன், இஞ்சிசுரசம் இவைகளில் ஷ்டி குளிகை ஒன்றைத்தீட்ட சகலசுரங்களும் விட்டோடிப்போம் கடும் பத்தியம்.

பூபதிக்குளிகை.

இரசம், கெந்தகம், வெண்காரம், லிங்கம், சிலை, நாபி, திரிகடுகு இவைகளைச் சமன்கொண்டு இஞ்சிரசத்தா லொருஜாமமாட்டி மிளகளவு உண்டைசெய்துவைக்கவும்.

அநுபானம்.

முலைப்பால், தேன், இஞ்சி, திரிகடுகு சூரணம், மிளகுகியாழத்தில் ஷ்டி மாத்திரை ஒன்றைத்தாக்க சகலசுரங்களும்தோஷங்களும் நிவர்த்தியாகும், கடும்பத்தியம்.

அன்றி ஷ்டி மருந்துகளைச் சூரணித்து நசியம் கலிக்கம் செய்யத் தீரும்.

வேறுசுரக்குளிகை.

கடுகுரோகணிவேர்க்கொம்பு கடுக்காய், நேர்வாளம், நொச்சிக் கொழுந்து இரசம், நாபி, வெண்காரம் அரிதாரம், ஜாதிலிங்கம் வகைக்கு களஞ்சி-க-பொற்றலைக்கையான்சாற்றால்-உ-ஜாமமாட்டி பயறளவு குளிகைகட்டவும்.

அநுபானம்.

ஷ்டி குளிகையை முலைப்பாலிலுண்ண சகலசுரங்களும் விட்டோடிப்போகும்.

வாதராட்சதன்குளிகை.

இரசம் விரா-அ, நாபி விரா-எ, கெந்தி விரா-௬, வெண்காரம் விரா-ரு, ஊமத்தன் விரா-௪ இவைகளைத்தனித்தனியே சுத்திசெய்து கல்வத்திலிட்டு சித்திரமூலவேர்க்கியாழம்விட்டு-உ-ஜாமமறைத்துமிளகளவுண்டைசெய்து வைக்கவும்.

அநுபானம்.

தேன்முலைப்பால் இன்னும்தக்க அநுபானங்களில் ஷ்டி மாத்திரை ஒன்றைத்தாக்க சன்னிவாதசுரம் வாய்வுகளுந்தீரும், கடும்பத்தியம்.

ஆயரசக்குளிகை.

இரசபஸ்பம், கோஷ்டம், அக்கிராகாரம், திப்பிலி, லவங்கம், காயம், குங்குமப்பூ, கோரோசனை, கஸ்தூரி, மூசாம்பரம் இவை

களைச்சமன்சேர்த்து வெந்நீர்விட்டாட்டி களாக்காய்ப்பிரமாணம் குளிகைசெய்யவும்.

அநுபானம்.

வியாதிரூபங்களுக்கேற்ற அநுபானமறிந்துசெய்ய சீதளம், அழுக்கு, சன்னி, வாய்வுமுதலியவைபோம், கடும்பத்தியம.

வாந்திபேதிக்கு கிவர்த்திகுளிகை.

பெருங்காயம் எடை-௰௫, சரியுப்பு, மிளகு, வெள்ளெருக்கன் நரம்புவகைக்கு எடை-எ, பளிங்கு எடை-௰௭, இரசப்பற்பம் எடை-௧ இவைகளை எட்டிக்கியாழத்தாலாட்டி அரைசுண்டக்காய்வீதம் குளிகைசெய்யவும்

அநுபானம்.

எட்டி திரிகடுகு கியாழத்திலிடவும் பத்தியம் கஞ்சி கொடுக்கவும்.

மகாபுன்னைவேர்க்குளிகை.

இரசம், காந்தம், கல்நார்பற்பம் வெண்காரபற்பம், திரிகடுகு சூரணம், காயம், கோரைக்கிழங்கு இவைகளைச்சமன்கொண்டு புன்னைவேர்ப்பட்டையைப்புட்டாக்கி இடித்து இரசம்பிழிந்து ஷை மருந்தை-௨-ஜாமமாட்டி பருத்திவிரையளவு குளிகைசெய்யவும்.

அநுபானம்.

ஷை குளிகையொன்றை இஞ்சிரசத்தில்தாக்க சுவாசகாசம், இருமல், மேல்மூச்சு, கோழைமுதலியதும்போம், இச்சாபத்தியம்.

மாந்தத்திற்கு வாலசஞ்சீவிகுளிகை.

வெள்ளைகாக்கட்டான்வேர்ப்பட்டை விரா-௨, இரசச்செந்தூரம் விரா-௨ பொரித்தவெண்காரம் விரா-௧, சுக்குத்தூள் விரா-௨ இவைகளை நிம்பழச்சாற்றாலாட்டி குன்றியளவுண்டைசெய்யவும்.

அநுபானம்.

இஞ்சிச்சாற்றிலும், தேன், முலைப்பாலிலும், திரிகடுகு கியாழத்திலும் ஷை மாத்திரையைத்தீட்ட. சகலமாந்தமும் விட்டோடிப்போம் பத்தியம் புளிதள்ளவும்.

மகா இலிங்காதிக்குளிகை.

முலைப்பாலில்சுத்திசெய்த லிங்கம்பலம் ௨க்கு கரண்டிக்கீரைச் சாறுபடி-௨ சுருக்கியந்து சாம்பிராணிசத்துபலம்-௧ இவைகளை விளாம்பிசின் ஊறவைத்தஜலம்விட்டரைத்து 60 உண்டைசெய்யவும்.

அநுபானம்.

போஸ்தக்காய் பலம்-உ, தூள்செய்து ஒருபடிசலத்தை அரைப் படியாய்க்காச்சி அந்தஜலத்தில் மூன்றுநாளைப்போட்டு சற்றுமூடிவைத்து நன்றாய்ப்பிசைந்து வடிகட்டி அதில்-கூ-பலம் சர்க்கரைசேர்த்து பாகுகாச்சி அப்பாகில் அந்திசந்தி ஒவ்வொருமாத்திரைஉறைத்துசாப்பிட்டபிறகு இரண்டுநாழிகையானவுடன் சாம்பிராணிசத்து பணவெடைதேனிலிழைத்து சாப்பிடவும். பசியெடுத்தால் அரிசியுடைத்துக் கஞ்சிகாச்சிக்குடிக்கவும் பிறகு மத்தியானத்திற்கு முருங்கைப்பிஞ்சு, கத்திரிப்பிஞ்சு, வாழைக்கச்சல், புளியாரை, தூதுவளைவத்தல், ஆதண்டைவத்தல், நெய்ஆகும், ஒவ்வொருவேளை இறைச்சியாகும் புளிலேசாய்க்கூட்டவும். ஈளை, இருமல், இரத்தகாசம், சுரம் முதலியவைபோம்.

நீரிழிவுமதுமேகத்திற்கு கற்பூராதிக்குளிகை.

பச்சைகற்பூரம், ஆவாரம்வித்து வகைக்குப் பலம்-க, வேப்பன்பிசின் விளாம்பிசின், மூள்ளிலவம்பிசின், முருங்கைப்பிசின், ஒதியம்பிசின் கருவேலம்பிசின், பனைமரப்பிசின், வெள்ளைக்குங்கிலியம், தேத்தான்வித்து, கடலழிஞ்சில்வித்து, கஸ்தூரி, கோரோசனை, குங்குமப்பூ, அபின் வகைக்கு விறா-ரு-உ, செவ்வகத்திச்சாறு, அத்திநீர், திரிபலைக்கியாழம் இதுகளில் ஒவ்வொன்றை ஒவ்வொருஜாமம் விட்டறைத்து தூதுளங்காய்ப்பிரமாணம் குளிகைசெய்யவும்.

அநுபானம்.

எருமைத்தயிர் தேன், நல்லெண்ணெ இவைகளில் ஷை குளிகை வைத்து-எ நாளுண்ண நீரிழிவு, மதுமேகம் நீரருகல், நீர்ச்சுருக்கு முதலியவைபோம். இச்சாபத்தியம்.

சன்னி-ய௩-க்கும் வீரக்குளிகை.

சுத்திசெய்தவீரம்-வி-னெ-க, பச்சைகற்பூரம்-வி-னெ-க, மிளகு வி-னெ-க இவைகளைக் குளிர்ந்தநீர்விட்டறைத்து மிளகளவு குளிகை செய்யவும்.

அநுபானம்.

தேன், கொடிவேலிக்கியாழம், மிளகுநீர் இவைகளில்தாக்க சன்னிபதின்மூன்றும் விட்டோடிப்போம், பத்தியம்-புளிமுதலியவை தள்ளவும்.

கிராணிக்கு கபாடக்குளிகை

ஜாதிக்காய், ஜாதிபத்திரி, காயம், சீரகம், விடையம், கிராம்பு அபினி வெங்தயம், வன்னிகெற்பம், கழற்சிப்பருப்பு குராசானிஓமம் இவைகளைச் சமன்கொண்டு செஞ்சாக்கியாழத்திலாட்டி இலந்தைப் பிரமாணம் குளிகைசெய்யவும்.

அநுபானம்.

ஷை குளிகையை ஆவாரம்பஞ்சாங்கத்தில் வைத்துண்ண சகல கிராணிவகைகளும்தீரும். இச்சாபத்தியம்.

சீதசுரம் சீதபேதிகளுக்கு ஆமையோடுகுளிகை.

ஆமையோடுசுட்டது பலம்-க, கற்பூரசலாசத்துபஸ்பம் பலம்-க விளாம்பிசின்ஊறவைத்த தண்ணீர்விட்டரைத்து மிளகளவுஉண்டை செய்யவும்.

அநுபானம்.

ஷை குளிகையை மாதுளம்சூரணத்திலும், சுக்குச்சூரணத்திலும் வைத்துண்ண சீதசுரம், சீதபேதிபோம், இச்சாபத்தியம்.

வீரியவிர்த்திக்குளிகை.

ஜாதிலிங்கம் வி-னெ-க, அபின் வி-னெ-க, முருங்கைவிரை வி-னெ-ச இவைகளை ஆவின்பால்விட்டரைத்து கடலைப்பிரமாணம் உண்டைசெய்யவும்.

அநுபானம்.

ஷை குளிகைஒன்றை ஆவின்பாலிற்கொள்ள வீரியவிர்த்தியாகும், பத்தியம்-காடை, புறா, கிருவை, அடைக்கலம், ஆட்டிறைச்சி முதலியவையாகும், அன்றிபதார்த்தங்களுக்கு மிளகு எலுமிச்சம் பழம் சேர்க்கவும்.

வேறுவீரியவிர்த்திக் குளிகை.

ஜாதிக்காய் லவங்கம் வகைக்கு வி-னெ-ம, கோதும்பைஅரிசி வி-னெ-ச, கசகசா வி-னெ-உ, லிங்கம் வி-னெ-உ, அபின் வி-னெ-க, ஊமத்தைவித்து வி-னெ-க, கஞ்சாவித்து வி-னெ உ இதுகளைப்பொடித்துக் கல்வத்திலிட்டுப் பின்வெட்டிவேறுக்கு தண்ணீர்விட்டிடித்துப்பிழிந்து அந்தசாற்றால் ச-ஜாமமாட்டியும். மலைவேம்புபட்டைச் சாற்றால்-உ ஜாமமரைத்தும் கழுதைப்பால்விட்டுப் பனிரெண்டுஜாமமரைத்துக் குன்றியளவுண்டைசெய்யவும்.

அநுபானம்.

ஷை குளிகையொன்றை தேங்காய்ப்பாலிற்கொள்ளவும், குன்மரோகத்திற்கு வெள்ளாட்டுப்பாலிற் கொடுக்கவும், வாதசரீரத்திற்குப் பசும்பாலிற்கொடுக்கவும், மேகசரீரத்திற்குதேனிற்கொடுக்கவும், பித்தசரீரத்திற்கு கரும்பின்ரசத்திற்கொடுக்கவும், மேற்கூறிய வியாதிகளைப் போக்கி விந்துநாதங்கேணியாகும். பத்தியம்-மேற்கூறியவை.

அன்றிமேற்கூறிய தாதுவிர்த்திக்குளிகைக்கு நிம்பழத்தால்முறிப்பெனச் சொல்லப்படும்.

வாலரசக்குளிகை.

வாலைரசம் வி-னெ-க, இரசச்செந்தூரம் வி-னெ-க, விடத்தாரிவேர்ப்பட்டை வி னெ கவ இம்மூன்றையும்முலைப்பாலில்விட்டு மயனம்போலாட்டி கடலைப்பிரமாணங் குளிகைசெய்யவும்.

அநுபானம்.

ஷை குளிகையைவெந்நீரில்தாக்க பவுத்திரம், கைகறுப்பு, சர்வமேகரிணங்கள், கண்டமாலை, சொரிகுஷ்டம்,மேகத்தடிப்பு இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

## சூரணவகைகள்.



கெந்தகச்சூரணம்

கெந்திவி-னெ - க, இரசகற்பூரம் வி னெ-க, அயச்செந்தூரம் வி-ங இவைகளை ஆர்க்கப்பொடிசெய்து சுக்குபலம்-க, கரிமஞ்சள்பலம்-க சூரணஞ்செய்து ஷை சூரணத்தோடுகலந்து கல்வத்திற்போட்டு நெகவரைத்து அந்திசந்தி வெருகடிப்பிரமாணம்-ரு-நாள்தேனிற்கொள்ள மேகவாய்வுபிடிப்பு,குடைச்சல், சூலை, மேகரிணங்கள்தீரும், பத்தியம்-புளி புகை புலால் நீக்கவும்.

பஞ்சவர்ணபூபதிச்சூரணம்.

காந்தம், அபினி, சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலக்காய், ஜாதிலிங்கம், ஜாதிக்காய், நற்சீரகம் செவ்வல்லி,கருஞ்சீரகம்,குராசானிஓமம், அதிவிடையம், கோரக்கர்மூலி மதுரம், தாளிசப்பத்திரி, கசகசா, கோரோசனை, காயப்பூ, சாதிபத்திரி, மாசக்காய், சடாமாஞ்சில், சிறுநாகப்பூ,லவங்கம்,சித்தரத்தை,வால்மிளகு வகைக்குகளஞ்சி-க இவைகளைப்பொடிசெய்து தேனிலுண்ண இருமல், ஈளை, காசம், குளிர்

ஜன்னி, நீர்க்கடுப்பு, வட்டை, காமாலை, கிரந்தி, கழிச்சல்முதலியவை போம்·சடும்பத்தியம்.

### வேர்க்கொம்பு சூரணம்.

இருசீரகம், குராசாணிஓமம், ஏலம், லவங்கம், திப்பிலி, காயம், கோஷ்டம், இந்துப்பு, சித்தரத்தை, வசுவாசி, ஜாதிக்காய், வெள்ளுள்ளி, கொத்துமல்லி, சுக்கு, பூரம் வகைக்கு வி-னெ-க இவைகளைச் சூரணித்து தேனிலுண்ண ஜன்னி, மந்தம், பொருமல், டமையபுண், இருமல், திமிர், பித்தவாய்வு, சூலை, குன்மம், முதலியவைபோம்.

### தசமூலிச் சூரணம்.

சிவனார்வேம்பு, சிந்திற்கொடி, சிறுகுறுஞ்சான்வேர், நன்னாரிவேர், சங்கம்வேர், அமுக்கராவேர், நிலப்பனைக்கிழங்கு, பூவரசம்பட்டை, பரங்கிச்செக்கை. வெள்ளறுகு, திரிகடுகு, சிறுநாகப்பூ, வெளிச்சம்பிசின், ஏலம், பெருங்காயம், சந்தனம், தக்கோலம், மதுரம், கஸ்தூரிமஞ்சள், சடாமாஞ்சில், லவங்கம், கருவேப்பிலை, ஆபின்வகைக் குப்பலம்-க கஞ்சாவித்து பலம்-ச, பனைவெல்லம் பலம்-அ இவைகளை இடித்து மெழுகாக்கிசுண்டைக்காய்வீதம்கொள்ள கருங்குட்டம் மேகத்தடிப்பு மேகப்படை, வாய்வுமுதலியவைபோம்.

கெஞ்சாவை ஒருநாள் ஜலத்திலூறவைத்து மறுநாள் ஏழுசலம் விட்டுக்கழுவி எடுத்துலர்த்திசேர்க்கவும்.

### வசுவாசிசூரணம்.

வசுவாசிகளஞ்சி-உ, லவங்கம், ஏலம், மதுரம், மரமஞ்சள், சீரகம், சிறுநாகப்பூ திரிகடுகுவகைக்கு களஞ்சி-க இவைகளைப் பொன்வறுப்பாய்வறுத்துச்சூரணித்து திரிகடிப்பிரமாணம் தேனிலுண்ண உட்குத்து, சுவாசகாசம், இருமல், பித்தவாய்வுமுதலியவைநீங்கும். இச்சாபத்தியம்.

### சத்திவிக்கலுக்குச்சூரணம்.

திப்பிலி வி-னெ-அ, சீரகம் வி-னெ-ம, அத்தி-வி-னெ-ரு இவைகளைப் பொன்வறுப்பதாக்கிச்சூரணித்து மயிலிறகைச்சுட்டுக்கரியாக்கி வி-னெ-க கலந்துதேனிலுண்ண சத்திவிக்கல்நீங்கும்.

### கக்குவாய்க்கு திப்பிலிச்சூரணம்.

செருப்புபற்பம், திப்பிலி இவைகளைச் சமன்சேர்த்து தேனிலுண்ண கக்குவாய்நீங்கும்.

ஈளை இருமலுக்குச்சூரணம்.

நெல்லி, திப்பிலி, நெற்பொரி இவைகளைச்சமன்கொண்டுசூரணித்து தேன்நெய்யிற்கலந்துண்ண ஈளை இருமல்போம்.

வாதராட்சதன் சூரணம்.

திரிகடுகு, சன்னராஷ்டகம் திப்பிலி. கெண்டுபாங்கி, லவங்கம், மதுரம், கோஷ்டம். சீரகம், அக்கிராகாரம், லவங்கப்பட்டை, கருஞ்சீரகம், ஓமம் வகைக்குப்பலம்-வ, இரசம், கெந்தகம், பொறித்தவெண்காரம் வகைக்கு வி ளெ-உ, முன்மருந்துகளைச்சூரணித்துப் பின் ரசம், கெந்தகம், பொறித்தவெண்காரம் இவைகளைக் கல்வத்திலிட்டு ஆட்டிக்கொண்டே ஷை கற்கவகைச்சூரணத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் ரேகிக்கச்செய்து வெருகடிப்பிரமாணம் தேனிற்கொள்ள மேகப்பிடிப்பு, சூலை, குடல்வாதம், கைகாலில்வாய்வு, குன்மம் முதலிய ரோகங்கள்விட்டோடிப்போம். பத்தியம்-புளிபுகைபுலால்தள்ளவும்.

அசுவகெந்தி சூரணம்.

இலிங்கம் பலம்-வ, சிறுநாகப்பூ பலம்-உ ஏலம் பலம்-க, மிளகு பலம்-உ, திப்பிலி பலம்-ச, சுக்கு பலம்-அ, அசுவகெந்தி பலம்-கசு இவைகளைச்சூரணித்து திரிகடிப்பிரமாணம் சர்க்கரையிலுண்டு ஆவின்பால் உடனருந்த மேகவகைகள், அஸ்திசுரம், வட்டை, மேகபாண்டு, சுவாசகாசம், ஈளை, ஊறல்முதலியவைபோகும். இச்சாபத்தியம்

திராட்சாதி சூரணம்.

தீவதாட்சி, பேரீச்சு, மதுரம், ஏலம் சந்தனம், நெற்பொரி, விலாமிச்சுவேர் வகைக்குப்பலம்-உ நெல்லிமுள்ளி, கிராம்பு, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, தாளிசபத்திரி, சிறுநாகப்பூ, வெட்டிவேர், வால்மிளகு, ஜாதிக்காய், கொத்துமல்லி, கோஷ்டம், சீரகம், தாமரைதாது நெய்தற்றூது, கூகைநீறு, கல்நார், கற்பூரசலாசத்து வகைக்குப்பலம்-வ இவைகளைச்சூரணித்து குங்குமப்பூ விரா-க, பச்சைக்கற்பூரம்-விரா-வ ஒக்கச்சேர்த்து சீனிபலம்-அஉ,யுங் கலந்தொன்றுபடுத்தி ஒரு விராகனெடைப் பிரமாணமுண்ண பித்தம்-சஙு, அக்கினிமந்தம், அரோசிகம், சயம், இருமல், விக்கல், மூத்திரக்கிரிச்சனம், மேகவட்டை முதலியவை நிவாரணம், இச்சாபத்தியம்-அன்றி மேற்கூறிய கல்நாரையும், சலாசத்தையும், தனித்தனி ஆவின்பாலில்நெகவரைத்து புடமவைத்து நீற்றிச்சேர்த்துக்கொள்ளவும்.

பஞ்சதீபாக்கினிச்சூரணம்.

சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஏலரிசி இவைகளைப்பொன்வறுப்பாக்கிச்சூரணித்து சீனிகலந்து திரிகடிப்பிரமாணம் கொள்ளவும்

அநுபானம்.

தேனிற்கொள்ள வாதநோயகலும், நல்லஜலத்திற்கொள்ள வாய்வுபீடைபோம், வெந்நீரிற்கொள்ள மந்தம்நீங்கி பசியுண்டாம், வெள்ளைசர்க்கரையிற்கொள்ள பித்தரோகங்களும், வெண்ணெயிற்கொள்ள உஷ்ணநோய்கள்விட்டோடிப்போம், இச்சாபத்தியம்.

## லேகிய வகைகள்.

கடுகுலேகியம்.

கடுகு பலம்-உ, மஞ்சள் பலம்-க, அப்பளாகாரம் பலம்-௧ இது களைச்சூரணித்து, பனைவெல்லம் பலம்-௩, பாகுசெய்துஷை-சூரணத்தைப்போட்டுக்கிண்டி கழற்சியளவுலேகியங்கொள்ள குழந்தைபெற்றவர்கள் வயிற்றில்தங்கிய அழுக்குநீங்கும்-இச்சாபத்தியம்.

குங்குமப்பூலேகியம்.

பருத்தியிலை பிடி-க, சீரகம் வி-ளை-க, மிளகு வி-ளை-வ, சட்டியிலிட்டுச்சாம்பலாக்கி நிம்பழச்சாறு உழக்குவிட்டுசுண்டக்காச்சி ஏலக்காய், கடுக்காய், திப்பிலி, சுக்குவகைக்குப் பலம்-உ சேர்த்துச் சூரணித்து ஷை சாம்பலில்கலந்து குங்குமப்பூ ஒருரூபாயெடைசேர்த்து அரைபடிபன்னீரில் வெள்ளைசர்க்கரைபலம்-கடு சேர்த்துப்பாகுசெய்து ஷை மருந்துகளைக்கொட்டிக்கிளறிக்கொண்டே ஆவினெய்பலம்-ம விட்டுக்கலக்கிக் கிளறி இறக்கி தேன் பலம-உ விட்டு கழற்சியளவு சாப்பிட அட்டகுன்மம், அன்னத்துவேஷம், அரோசிகம், கண்ணெரிவு, காலெரிவு, மார்நோய் பித்தஎரிச்சல், சூடு, பித்தம், மேகம், மூலம், கடுப்பு, வெள்ளை, பயித்தியம் முதலியவை நீங்கும்-இச்சாபத்தியம்.

தும்மட்டிக்காய் கடுகுலேகியம்.

தும்மட்டிக்காய்சாறுநாழி, நிம்பழச்சாறுநாழி, வெண்ணொச்சிச்சாறுநாழி இஞ்சிச்சாறுநாழி, வெள்ளுள்ளிச்சாறுநாழி இவைகளை நாலிலொன்றாகக்காச்சி யதில் ஜாதிலிங்கம, காயம், சூதம், கெந்தி, நாய்க்கடுகு மிளகு, மஞ்சள், சுத்திசெய்தவாளம் வகைக்குக்களஞ்சி மூன்றாகபொடித்துத்தூவி பழப்புளியதமாகும்வரையிலெரித்துண்ண அட்டகுன்மம், சூலை, பெருப்பாடு, பெருவயிறுமுதலிய ரோகங்கள்விட்டோடிப்போம்-கடும்பத்தியம்.

கண்டாத்திரிலேகியம்.

இஞ்சிபலம்-அ, பொன்வறுப்பாக்கி இடித்துத்தூளாக்கி மிளகு, திப்பிலி தாளிசப்பத்திரி, சிறுநாகப்பூ, ஏலம், சீரகம், ஜாதிக்காய்,

லவங்கம், ஜாபத்திரி, கோஷ்டம், கடுக்காய்,மதுரம்வகைக்குப்பலம்-உ சேர்த்து சூரணித்து தேனிலேபிசைந்து தான்றிக்காயளவுண்ண குன்மம், சனுர்வாய்வு, வயிற்றுவலி, அக்கினிமந்தம், இருமல்முதலியவை போகும்-இச்சாபத்தியம்.

சுக்குலேகியம்

சுக்கு பலம்-ரு, பழச்சாத்திலூறவைத்துலர்த்திமறுபடியும்கீழாநெல்லிச்சாற்றிலூறவைத்து ஓமம் அரிசி பலம்-கவ இவைகளைச் சூரணித்து சர்க்கரைபலம்-எஉ,பாகுகாச்சிபதத்தில் ஷை சூரணத்தைத் தூவி நெய் பலம்-ரு-சேர்த்துக்கிண்டி இறக்கி தேன் பலம்-கவ-விட்டு சுண்டக்காயளவு அந்திசந்திகொள்ள வயிற்றிறைச்சல், ஊஷ்ணபேதி முதலியவைபோகும், இச்சாபத்தியம்.

மகாகூழ்பாண்டமதனசிந்தாமணிலேகியம்.

கலியாணபூசனிக்காய் சாறுபடி-அ, கரும்பஞ்சாறு, விழுதிச்சாறு கருவிச்சாறு, தென்னம்பாளைச்சாறு, கற்றாழைச்சாறு, இஞ்சிச்சாறு, வல்லாரைச்சாறு எலுமிச்சைச்சாறுபால்வகைக்குபடி-உ,ஆவாரம்பட்டைபூவித்து, சீந்தில், சித்தாமுட்டி, வெட்டிவேர், வில்வம், நெல்லி, அசுவகெந்தி, கோரைக்கிழங்கு, நெறிஞ்சில், செங்நெறிஞ்சில், மிளகரணை, சங்கன்வேர், களாவேர், துத்தி, நிலப்பனைக்கிழங்குவகைக்கு பலம்-ரு, துணித்துப் பாண்டத்திட்டு மூன்றுதூணிநீர் விட்டு எட்டிலொன்றாய்வற்றக்காச்சி முன்சாற்றிலூட்டி ஒன்றாயின பின், திரிகடுகு, ஏலம், திரிபலை, வாய்விளங்கம், கோஷ்டம், மதுரம், அக்கிராகாரம், லவங்கப்பட்டை, சடாமாஞ்சில், சிறுநாவல், புன்னை வித்து, பருத்திவித்து, அரத்தை, ஜாதிப்பத்திரி, லவங்கம்,குருசானி ஓமம், கூகைநீறு, சந்தனம், சீரகம், குறுவேர், கொத்துமல்லி, கெஞ்சாயிலை ஜாதிக்காய், தாளிசப்பத்திரி, மாசக்காய், மைசாட்சி, வால் மிளகு, செவியம், அபின் சீந்திற்சக்கரை, பன்னீர்ப்பூ, துளசிவித்து, கஞ்சாவித்து, அத்திவித்து, ஆலம்வித்து, அரசம்வித்து, முருங்கை வித்து, துத்திவித்து பூமிசர்க்கரைக்கிழங்கு,சோம்பு, வெந்தயம்,வில்வப்பழம்,கிழப்பனை பூனைக்காலிவித்து,தாமரைக்கிழங்கு,அசுவகெந்தி தகரை, விசுப்புகோல்வித்து, சிலாசத்து, வேப்பம்பிசின், விளாம் பிசின், முந்திரிகைப்பழம்,மாம்பருப்பு, மாதளைவித்து முள்ளிவித்து, கல்நார், சூரிவித்து,கசகசா, வகைக்குப்பலம்-க இடித்து சூரணித்து சீனிபாகுசெய்து மேற்படிசூரணத்தைப்போட்டுக்கிண்டி ஆவினெய் படிவிட்டுக்கிளறி இறக்கி தேன்பலம்-ம-ஒக்கச்சேர்த்து லேகியமாயின பின்பி இந்நூலிற்கூறியபவளபற்பமும், நாகபற்பமும்வைத்தொருமண்டல

முண்ண கிருணி, அதிசாரம், பித்தவட்டை, அஸ்திசுரம், ஈளை, காசம், சோகை, பாண்டு, காமாலை, அட்டகுன்மம், கபாலச்சூடு, நவமூலம், சுரசூலை, தலைசுழட்டல், சத்தி, இரத்தப்பிரமியம், விக்கல், வலிகிரந்தி, குத்து, வெண்குட்டம், விப்புருதி, நீராம்பல், துடைவாழை, விரைவாதம், சூதகவாய்வுமுதலிய ரோகங்கள்நீங்கி, விந்துறுங்கேணியாகும் இச்சாபத்தியம்.

கையாந்தகரைக்கிருதம்.

கையாந்தகரைச்சாறுபடி-உ, பனைவெல்லம் பலம்-ரு-கரைத்துப் பாகுபதமாகக்காய்ச்சி, திரிகடுகு, திரிபலை, திப்பிலிக்கட்டை வகைக்குப் பலம்-உ-சூரணித்து, அடியிற்கூறிய அயச்செந்தூரம் பலம்-க-ஒக்கக்சேர்த்து ஷைபாகிற்கலந்து தேன்பலம்-கரு-விட்டு இளகிணபதமாயிறக்கி சுண்டைக்காயளவு அந்திசந்தியுண்ண சோகை, காமாலை, கணைச்சூடு, வீக்கம், தேகத்தில் இரத்தம்சுண்டி வெளுத்தல், ஊதுகாமாலை, பொருமல்முதலியரோகங்கள் நீங்குமென்றறிக. இச்சாபத்தியம்.

அயச்செந்தூரம்.

நிம்பழச்சாற்றில் மூன்றுநாளூறப்போட்ட அயம் பலம்-ரு, கல்வத்திட்டு கையாந்தகரைச்சாறுவிட்டாட்டி யுலர்த்தி சிறுவில்லைகளாக்கி ஓட்டில்வைத்துமூடி மண்சீலைசெய்து முழப்புடம்போடவும்மேற்கூறியதைப்போல் பதின்மூன்றுபுடம்போடச் செந்தூரமாம்.

உடும்பு லேகியம்.

உடும்பு இரண்டை தலை, தோல், குடல், விரல், போக்கியபின் கொத்துமல்லி, சோம்பு, இவைகளைச்சமன்கொண்டிடித்து அரிசியாக்கியதில் பலம்-ம-ஈருள்ளிவீசை உ சேர்த்து மெகவரைத்து ஷை உடும்பின்வயிற்றினுள்பூசி காராக்கருணைபலம்-உம-கீழ்மேலிட்டு சட்டியில் வைத்து ஜலம்நிறப்பி தீயிட்டெரிக்க பிட்டாகும், அப்பிட்டைப்பிசைந்து எலும்புகளையிடித்து ஒக்கச்சேர்த்து சிறுவில்லைகளாக வடகஞ்செய்து இரவியில்வைத்து திரிகடுகு, வால்மிளகு, சிறுநாகப்பூ, மதுரம், அக்கராகாரம் ஏலம் லவங்கம், சிறுதேக்கு, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, சிறுலவங்கப்பட்டை, வாய்விளங்கம், நிலப்பனைக்கிழங்கு, பரங்கிப்பட்டை, வகைக்குப்பலம்-ரு-முள்ளிலவம்பிசின், முளளிவித்து, வகைக்குசேரு-வ, சடாமாஞ்சில், தாளிசம், ஆலம்வித்து, அத்திவித்து, துத்திவித்து, ஆளிவித்து, தேத்தான்வித்து, துளசிவித்து வெள்ளரிவித்து, சப்ஜாவித்து, சத்திசாரணைக்கிழங்கு, வெட்டிவேர், நன்னாரி, சதாவேரி, அசுவகெந்தி, கோஷ்டம், கசகசா, வகைக்குப்பலம்-உ

சூரணித்து மேற்படி உடும்புவடகத்தையும் ஒன்றுபடுத்தி இடித்து சர்க்கரையிற் கலந்து ஆவினெய் வீசை உ-சேர்த்து கிளறி இறக்கி தேன்வீசை-வ-கூட்டி புன்னைக்காயளவு அந்திசந்தி ஒருமண்டலம் கொள்ள மேகரோகங்கள் இருபத்தோன்றும் நீங்கி குளிர்ச்சிதந்து தாதுவிர்த்தியுண்டாம் பத்தியம்-காடை, அடைக்கலம், விலாங்கு, முருங்கைப்பிஞ்சு, கத்திரிப்பிஞ்சு சுண்டக்காய் அவரை, புரு, வெள்ளாட்டிறைச்சி, ஆவின்பால், நெய் முதலியவைஆகும், கடுகெண்ணை நீக்கவும்.

பிரண்டைலேகியம்.

பிரண்டைக்கிழங்கு, மருட்கிழங்கு, புளிகருணைக்கிழங்கு, கொடிவேலிவேர், செந்நாயுருவிவேர் வகைக்குபலம் ய, சிறுகுறுக்கிப்பாண்டத்திட்டுப் பதக்குஜலம்விட்டு எட்டொன்ருய்க்காய்ச்சிறக்கி பழஞ்சர்க்கரை பலம்-உரு-சேர்த்துப் பாகுசெய்து கொட்டைநீக்கிய கடுக்காய்-ா, திரிகடுகு, சீரகம், கருஞ்சீரகம், சதகுப்பி, விழலரிசி, குடபாலைஅரிசி, கோஷ்டம், நிலப்பனைக்கிழங்கு, லவங்கம், ஆனைத்திப்பிலி, லவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, தான்றிக்காய், நெல்லிப்பருப்பு, மரமஞ்சள், ஓமம் வகைக்குப்பலம் க, பிரமியிலைச்சூரணம் பலம்-உ இவைகளைச்சூரணஞ்செய்துஷை பாகிற்போட்டுக்கிண்டி நெய்பலம்-அ, நல்லெண்ணை பலம்-ச-ஒன்றுசேர்த்துக் கிளறி இறக்கி தேன்பலம் ரு-விட்டுக்கலந்து புன்னைக்காயளவுஅந்திசந்தி-உய-நாளுண்ண மூலம் மூலக்கிராணி, மூலகுன்மம், சதையடைப்பு, மலபந்தம், மூலஇறைச்சல், சரீரமிளைப்பு, யோனி, சதையடைப்பு, மலஜலதாரையில் சதையையுண்ணல், மூலவீக்கம், மூலத்தினவு, மேல்நோக்கியவாய்வு, அக்கினிமந்தம், மூலபாண்டு ஆகியரோகவகைகள் நீங்குமென்றறிக பத்தியம் கைப்பு புளிப்புவகைகள் நீக்கவும்.

ஜாதிக்காய் லேகியம்.

ஜாதிக்காய், கசகசா, முருங்கைப்பிசின், ஆவாரம்பிசின், கோதும்பைநொய் வகைக்குப்பலம்-உ-ஏலம், இலவங்கம், இலவங்கப்பட்டை வகைக்குப்பலம் உ இவைகளைச்சூரணித்து-ரு-தேங்காய்ப்பாலில்நாட்டுச்சர்க்கரைபலம்-ய-சேர்த்துப் பாகுசெய்து ஷை சூரணத்தைத் தூவிக்கிளறி பதத்தில் நெய்பலம்-ய-விட்டு அலுவாபோல்செய்துஅந்திசந்தி-ய-நாளுண்ண லேபனபுஷ்டியுண்டாம்.

கருணைக்கிழங்கு லேகியம்.

காராக்கருணையை மேல்பரணிசீவி ஆவின்பாலில் வேகவைத்துக்கடைந்து பனைவெல்லப்பாகில்விட்டு நெய்சேர்த்துக்கிளறி பாக்

களவு அந்திசந்தி-ம-நாளுண்ண நவமூலங்களும் விட்டோடிப்போமென்றறிக.

### சிவனார்வேம்பு லேகியம்.

சிவன்வேம்பு ஆள்சுமை-க-கொண்டுவந்து உலர்த்திடித்து நாலு பானையிற் போட்டு தண்ணீர்விட்டு-ங-நாளூறிப்பின் எட்டிலொன்றாய்க்காய்ச்சிறக்கி சங்கம்வேர் வீசை-க, துரட்டுமுள்வேர் வீசை-க ஒரு பானையில்போட்டு ஜலம்விட்டு மூன்றுநாளூறியபின்முன்போலஎட்டிலொன்றாகக்காய்ச்சிறக்கி ஷை கியாழத்திலொன்றுபடுத்தி வேறுபாண்டத்திட்டு ஒருபடியாகக்காய்ச்சி யதில்வெள்ளாட்டுநெய்படி-உ சர்க்கரைபலம்-ம-சேர்த்து சுண்டக்காய்ச்சி லேகியபதத்திலிறக்கிகழற்சிக்காயளவு அந்திசந்திமண்டலம்கொள்ள கன்னப்பிளவை,மேகப்படை, மேகரணம், ஊறல், கிரந்திப்புண், வெள்ளை, வெண்மேகம், திமிர்வாய்வு, கீல்வாய்வு, தமரகவாய்வு, பாரிசவாய்வுமுதலிய ரோகங்கள் நீங்குமென்றறிக பத்தியம்-வியாதிகளுக்குத்தக்கதாக வைத்துக்கொள்ளவும்.

### தாளிசப்பத்திரிலேகியம்.

தாளிசப்பத்திரி, அரத்தை, வெண்மிளகு,சிறுநாகப்பூ,திப்பிலி, ஆனைத்திப்பிலி, இலவங்கப்பத்திரி, இலவங்கப்பட்டை வகைக்குப் பலம்-க, ஏலம், இலவங்கம், ஜாதிக்காய் வகைக்கு பலம்-வ இவைகளைச்சூரணித்து படிஆவின்பாலில் சர்க்கரைபலம்-உம-சேர்த்துப் பாகுசெய்து ஷை சூரணத்தைத்தூவி ஆவினெய்பலம்-ம-சேர்த்துக் கிளறி இறக்கி தேன்பலம்-ரு-கூட்டி புன்னைக்காயளவு காலைமாலை சம-நாளுண்ண இருமல், ஈளை, காசம், சுரம்முதலிய ரோகவகைகள் நீங்குமென்றறிக இச்சாபத்தியம்.

### தாதுவிர்த்திக்கு மன்மதலேகியம்.

கருவேலம் வித்தின்பருப்புதூள் பலம்-அ, களிப்பாக்குத்தூள் பலம்-அ, கருவேலம்பிசின் பலம்-ங; ஒருசட்டியில்-உ-படி ஆவின் பால்விட்டு ஏடுகட்டி முன்மாவைக் கீழ்மேலிட்டு நடுவில் பிசின் வைத்துமேல்மூடி அடுப்பில்வைத்து சிறுதீயாயெறித்து அரைபடி பால்சுண்டியசமயத்தி லிறக்கி முன்மருந்தைக்கொட்டி நன்றாய்ப் பிசைந்து ஷை பாலில்-கரு பலம் சர்க்கரைபோட்டு பாகுபதத்தில் ஜாதிக்காய், ஜாபத்திரி, ஏலம், இலவங்கம் வகைக்கு பலம்-க, தூள் செய்துபோட்டுக்கிளறி நெய் பலம்-எஉ விட்டுக்கிண்டி இறக்கி தேன் பலம்-ஙஉ விட்டு லேகியம் பாக்களவுசெய்து மண்டலம்கொள்ளமேக

ரோகங்கள்நீங்கி வீரியவிர்த்தியுண்டாம், பத்தியம் - கடுகெண்ணை, மீன், கருவாடு முதலியவைகளைநீக்கவும்.

{ கிருஷ்ணலீலாவிநோதக் குளிகையென்னும் தாதுவிர்த்தி லேகியம். }

கியாழவகைகள்.

தனியா படி-வ, பேய்ப்புடல், வில்வம், செல்லிசர்க்கு, சிறுதா முட்டி, பேராமுட்டி நெல்லுபொரி, கோரைக்கிழங்கு, விளாவோடு, நிலவாகை வகைக்கு பலம்-க, நான்குபடிஜலம்விட்டு ஒருபடியாகச் சுண்டக்காய்ச்சவும்

சூரணத்தினுசுகள்.

சுக்கு, மிளகு, வெண்மிளகு, சீரகம், கருஞ்சீரகம், ஏலரிசி, திப்பிலி, ஜாதிக்காய், லவங்கம், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, குராசாணிஓமம், ஜாதிபத்திரி, மராட்டிமொக்கு, வாய்விளங்கம், அக்கிராகாரம், அதிமதுரம், சந்தனம், கோஷ்டம், மோடி, தான்றிக்காய், நெல்லிக்காய், சூரத்துநிலவாகை, சிவதைவேர், சோம்பு, தக்கோலம், கடுக்காய்ப்பிஞ்சு, வால்மிளகு, தாளிசபத்திரி, அதிவிடயம், சாஜிரா, ரோஜாப்பூ, சூரியகாந்தி, மதனபீசம், வெள்ளைச்சார்வளைவேர்சீந்தில் சர்க்கரை, செண்பகப்பூ வகைக்குப்பலம்-க, பரங்கிச்செக்கைபலம்-ரு, நன்னாரி பலம்-உய், கெஞ்சாவித்து. அத்திவித்து, பூனைக்காலிவித்து, முருங்கைவித்து, சப்ஜாவித்து, துளசிவித்து துத்திவித்து, பேதாணுவித்து வகைக்கு பலம் க, ஊமத்தைவித்து, ஆலம்வித்து, அரசன்வித்து, நீர்முள்ளிவித்து, விசுப்புகோல்வித்து, கார்போகவித்து, காட்டுவாழைவித்து. நத்தைச்சூரிவித்து, நருவுளிவித்து, வெட்பாலைவித்து. சமுத்திரஜோகிவித்து; முருக்கன்வித்து, பீஜபன்வித்து, வெள்ளரிவித்து. ஜாப்ராவித்து, ஆவாரம்வித்து அக்ரோட்வித்து, தற்போஜிவித்து, பிஸ்த்தோல்வித்து, நிலப்பூசனிவித்துவகைக்கு பலம்-உ தண்ணீர்மிட்டான்கிழங்கு, கன்னியாகுமரிக்கிழங்கு, பூமிசர்க்கரைக்கிழங்கு நிலப்பனைக்கிழங்கு. கோரைக்கிழங்கு. அமுக்கராகிழங்கு, ரேவல்சின்னிக்கிழங்குவகைக்குபலம்-க இவைகளைச்சூரணிக்கவும்பாதாம்பிசின், காட்டுவாபிசின், வேப்பன்பிசின், இலவம்பிசின், விளாம்பிசின் முருங்கைப்பிசின், வேலம்பிசின், ஆலம்பிசின், ஆவாரம்பிசின், சாலாம்பிசின் வகைக்கு பலம் உ இவைகளை மேற்கூறிய கியாழத்தில்-அ-ஜாமமூறவைத்து கல்வத்திலரைத்தரைத்துக் கியாழத்திற்கலக்கி வடிகட்டி திப்பியை அப்புறப்படுத்தி-ரு-படி ஆவின்பால் ஒக்கச்சேர்த்து அடுப்பேற்றி சற்றுகொதிக்கவைத்து பனவெட்டு பலம்-உய்-கரைத்துப்

பாகுபதத்தில் முன்சூரணத்தைத்தூவிக்கிளறி நெய் பலம்-உ௰-சேர்த்து நீர்வற்றமெழுகுபதத்திற் கிண்டிஇறக்கி தேன்பலம்-௰-விட்டுப் பின்வெண்காரபற்பம், சிங்கிபற்பம், பலகறைபற்பம், கல்நார்பற்பம், சலாசத்துபற்டம்,நாகபற்பம் வெள்ளிபற்பம் வகைக்கு பலம்-வ-சேர்த்து ஒன்றாய்த்திரட்டி புன்னைக்காயளவு அந்திசந்திமண்டலம்கொள்ள மேகச்சூடு, பித்தவாய்வு, வெள்ளை, மதுமேகம் காசம், தந்திமேகம், இரத்தவெள்ளை, நீர்ச்சுருக்கு, எலும்புருக்கி, நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, மலச்சிக்கல், அரைகடி சிரங்கு,கிரந்தி, கபாலச்சூடு, பீனிசம், கண்ணருகல், குத்துவாதம. சத்தி, நாவரட்சி, சுக்கிலவாய்வு, மூர்ச்சைமுதலிய மேகநோய்கள்நீங்கி தேகவாட்டமின்றி சுக்கிலமீறி மகாவிஷ்ணுவாகிய கிருஷ்ணாவதாரனைப்போலமிகு சுகபோகங்களை அநுபவிக்கலாமென்றறிக, அன்றி மேற்கூறியலேகியத்தை உண்டவர்களுக்கு ஒருக்கால் மலச்சிக்கல்நேரிடில் குல்குந்து சமன்கூட்டியுண்ணவும், பத்தியம்-விலாங்கு, காடை அடைக்கலம். உடும்பு, முயல், கோழிமுட்டை, ஆட்டிறைச்சி, முருங்கைப்பிஞ்சு, முருங்கைப்பூ, விளாம்பழம், நெய், சீனி, கற்கண்டு, ஆவின்பால் பொன்னாங்கண்ணி, மணத்தக்காளி. வெந்தயக்கீரை, முளைக்கீரை, பருப்புக்கீரை, அத்திக்காய், அவரைக்காய், வெண்டைக்காய்முதலியவை சேர்க்கவும். கடுகெண்ணை, மச்சமுதலியவை நீக்கவும், அன்றி மேற்கூறியலேகியத்தையுண்டபின் சாரப்பருப்பு, பாதம்பருப்பு, திராட்சப்பழம், பேரீச்சன், கற்கண்டு, தேன் இவைகளைச் சமன்கொண்டு மட்சாடியிலிட்டு சூரியபுடம் வைத்துவைத்து கொஞ்சம் புசிக்கவும் மிகநன்று.

தாதுவிர்த்திக்குப் பாயாசங்கள்.

ரூமஸ்த்திக்கு விரா-க, நீர்முள்ளிவித்து விரா-உ, கசகசாவிரா-ங இவைகளைப்பொடிசெய்து ஆவின்பாலில்காய்ச்சி-௰-நாளுண்ண தாதுவிர்த்தியுண்டாம்.

ஷை உ - வது.

ரூமஸ்த்திக்கு, சாலாமிசுர் சபேதாமிசுறி வகைக்கு விராஅ-க பொடித்து ஆவின்பாலிலிட்டுக் காய்ச்சி-௰-நாளுண்ண விந்தூறுங் கேணியாகும்.

ஷை ங - வது.

ஆவின்பால் படி-க, முருங்கைப்பூ பலம்-௰, முருங்கைப்பிசின் பலம்-ரு, ஜாதிக்காய் பலம்-க, சுத்திசெய்த கஞ்சாதூள் விரா-உ-சேர்

த்து சுண்டக்காய்ச்சி லேகியஞ்செய்து கொட்டைப்பாக்களவு காலை மாலை-ம-நாளுண்ண சுக்கிலவிருத்தியுண்டாம்.

ஷை ச - வது.

முருங்கைஇளம்பிஞ்சு பிடி. க, பசும்பாலுழக்கில் போட்டுக்காச்சிக் கடைந்துண்ண மேகரோகங்கள்நீங்கி வீரியவிருத்தியுண்டாம்.

ஷை ரு - வது.

முருங்கைப்பூ பிடி-க, வெள்ளெருக்கம்பூ பிடி-உ-அரைபடி ஆவின்பாலில் போட்டுக்காய்ச்சியுண்ண தாதுபுஷ்டியுண்டாம்.

## எண்ணெ வகைகள்.



### மேகவியாதிகளுக்கு நிலக்கடம்பு எண்ணெ.

விளக்கெண்ணெ படி-க-ல் நிலக்கடம்பையிலை, சங்கிலை, சங்கங்குப்பி, சிறுசின்னி, நுணா, குமரி, கோழிஅவரை, வெங்காயம் சாறு வகைக்கு படி-அரைக்கால், கழுதைவிட்டைப்பால், புங்கம்வேர்சிவினபால் வகைக்குப்படி அரைக்கால் சேர்த்து பச்சை செங்கத்தாரிப்பட்டை சித்திரமூலவேர்ப்பட்டை வகைக்கு பலம்-வ ஆவின்பாலில் அறைத்துக்கூட்டிப்போட்டு மஞ்சிட்டிவேர், பரங்கிச்செக்கை, கார்போகஅரிசி வெட்பாலையரிசி, வகைக்கு பலம்-வ சூரணித்து ஷை எண்ணெயிலொன்றுபடுத்தி கடுகுபதத்தில் காச்சியிறக்கி வடிகட்டி ஜாதிலிங்கம் விறு-க, ஆர்க்கப்பொடித்துப்போட்டு உச்சிக்கரண்டி ஒன்றுவீதம்-எ-நாள் சாப்பிட மேகப்படை, மேகத்தடிப்பு, மேகச்சொரி, சிரங்கு, மேகவாய்வு, சூதகவாய்வு, கட்டி, புண், கிரந்தி, நுணக்கிரந்தி முதலியவைநீங்கும். பத்தியம்-இறைச்சி, கத்திரிப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, வண்டைக்காய், அவரை, துவரை, ஓலைவாளைக்கருவாடு முதலியவைஆகும், சுட்டபுளி, வறுத்தவுப்புகூட்டவும், நெய்தாளிதத்துக்காம்.

### மேகத்தினலிளைத்தவர்களுக்கு நல்லெண்ணெ.

நல்லெண்ணெ படி-உ, பொடுதலைச்சாறு படி-உ, தேங்காய்ப்பால்படி-உ, வடிகட்டி வெந்தயம் பலம்-உ௦ ஊறவைத்து ஷை பால்விட்டறைத்து பனவெட்டு பலம்-உ௦.சேர்த்துக்கறைத்து ஷை எண்ணெயுடன்கலந்துகாய்ச்சிப்பதத்திலிறக்கி கடுகுடன்வைத்துக்கொண்டு அந்திசந்திபாக்களவு கடுகும்தின்று உச்சிக்கரண்டியளவு எண்ணெயும் சாப்பிட்டுவர மேகச்சூடு, மேகவாய்வு, சொரி, கைகாலசதி முதலியவைநீங்கும், பத்தியம்-புளி, புகை, புலால்நீக்கி நெய்தாளிதத்திற்

சேர்க்கவும், மிளகாய்க்குப்பதில்மிளகும, புளிப்புக்குபதில் எலுமிச்சம்பழமும் சேர்க்கலாம், மறுபத்தியமானபிறகுஸ்நாநஞ்செய்யவும்.

மேகவியாதிகளுக்கு தேங்காய் எண்ணை.

ஒருதேங்காய்த்திருவி பால்பிழிந்து இரசகற்பூரம் விரா-க-பொடிசெய்து பாலிற்போட்டுக்காய்ச்சிப் பதத்தில் எண்ணையை வடித்துக்கொண்டு கடுகில்பனைவெல்லம் பலம்-க, கூடப்போட்டுநெகவறைத்து தா துளங்காய்ப்பிரமாண முண்டைசெய்து காலமே ஒவ்வொரு உண்டையும் பணவெடை எண்ணையுமுண்டுவர மேகவாய்வு, மேகவூறல், சிரங்கு, நுணுக்கிரந்தி, ஊஷ்ணகாந்தல் முதலியவைநீங்கும்-இச்சா பத்தியம்.

சகலமேகங்களுக்கு சஞ்சீவிஎண்ணை.

பிரமி, காட்டுமல்லிகை, கொவ்வைத்தண்டு, பொடுதலை, அகத்தி, செருப்படை, பசுமுன்னை, முடக்கொத்தான். கொட்டைக்கரந்தி, சங்கஇலை, சங்கங்குப்பி, கழற்சி, கம்மாறுவெற்றிலை, கருநொச்சி, வெண்ணொச்சி, வல்லாரை, சிவனைவகைக்கு சாறுபடி உ, வெங்காயம், நிம்பழம், வகைக்குச்சாறுபடி உ, கழுதைவிட்டைப்பால் தேங்காய்ப்பால் வகைக்கு படி உ, விளக்கெண்ணைபடி-உ இவைகளைஒன்றுபடுத்தி சன்னலவங்கப்பட்டை. வேம்பாடம்பட்டை, பரங்கிப்பட்டை, சீரகம், பெருஞ்சீரகம், கருஞ்சீரகம், வெந்தயம் வகைக்கு பலம்-க, கல்நார், கல்மதம் வகைக்கு பலம்-உ ஆவின்பாலிலாட்டி ஷை எண்ணையிற்கலக்கிகாச்சி மெழுகுபதத்தில் குராசானிஓமம், கடுகுரோகணி வகைக்கு பலம் க-சேர்க்கவும், பேதியாகவேணுமென்றால் வாளம் சேர்க்கவும், இந்தஎண்ணையை உச்சிக்கரண்டிவீதம்-எ நாள்சொள்ள மேகக்கிரந்தி, மூலவாய்வு, வட்டை, மேகச்சூடு இவைகள்நீங்கும், பத்தியம் வியாதிகளுக்குத் தக்கவைசேர்க்கவும் ஷை எண்ணையைகாய்ச்சி இறக்கும்போது செம்பூராம்பட்டை தூள்செய்துபோட்டிறக்கவும்.

இடி எண்ணை.

சித்தாமணக்கெண்ணை படி ச, இரசம் பலம் வ காம்புபோக்கின பாவட்டையிலை பலம் உ உ, கொவ்வையிலை பலம் உ உ, பச்சைவெத்திலை பலம் உ உ, ஓமம் பலம் உ, மாவுரலிற்போட்டு இடித்து இரசத்தையும் கூடவிட்டு பூணில்லாவுலக்கையால் நாலுஜாமம்ஜாடி மரத்துடுப்பால் தூராவி உச்சிக்கரண்டியளவு எ நாள் உட்கொள்ள படர்தாமரை, நுணுக்கிரந்தி, மருகிரந்தி, கைகறுப்பு, கண்டமாலை, பவுத்திரமேகம், இரணமேகம், ஊறல்முதலியவைபோகும், பத்தியம் கடும்

பத்தியம், மறுபத்தியம் கழிந்தபிறகு விளக்கெண்ணெயில் ஸ்நாநஞ் செய்யவும்.

கல்லுருவி எண்ணெ.

விளக்கெண்ணெ படி க ல், கல்லுருவிப்பூண்டு சமூலமிடித்து தேங்காயளவு கலக்கிக்காய்ச்சிவடித்து ஆழாக்கெண்ணெயை எ நாள் கொள்ள மேகவாய்வுகள், கைகால்பிடிப்பு, வீங்கியிருத்தல், தாழுங் கால்முதலியரோகவகைகள்நீங்கும், பத்தியம் முருங்கைப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு, கத்தரிப்பிஞ்சு முதலியவையாகும், வறுத்தவுப்பு கூட்டவும், மறுபத்தியமாயினபின் ஸ்நாநஞ்செய்விக்கவும்.

குமரி எண்ணெ

விளக்கெண்ணெ படி க ல் குமரிச்சாறுபடி ۶, ஆவின்பால் படி ۶ கலந்து சீரகம், ஏலம் கிராம்பு, மதுரம், மாசக்காய், கோஷ்டம், சுக்கு வகைக்கு பலம் அரைக்கால். வெந்தயம் பலம்-வ, ஓரிலைத்தாமரை பலம் உ, இவைகளைப் பசும்பாலவிட்டரைத்து ஷை எண்ணெயிற் போட்டுக்காய்ச்சிப் பதமாகுமுன் பேயன்வாழைப்பழம் கரு துண்டு துண்டுகளாக்கி எண்ணெவடிக்கிற ஏனத்திற்போட்டு பதத்தில் எண்ணெயை வடித்துக்கொண்டு கரண்டியளவு பிள்ளைகளுக்குத்தக்களவு கொடுக்க சொரி, கரப்பான், சிரங்குபோம் இச்சாபத்தியம்.

குளிர்ச்சிக்கு எண்ணெ.

விளக்கெண்ணெ படி க ல் ஓரிலைத்தாமரைச்சாறுபடி ۶, ஈரவெங்காயச்சாறுபடி ۶, எலுமிச்சம்பழச்சாறுபடி அரை, கத்தாழஞ்சோறு படி அரை, வெந்தயம பலம் ய, அரைத்துக்கரைத்துக்காய்ச்சி பதத்தில்வடித்துக் கரண்டியளவுசாப்பிட உஷ்ணகாந்தல், மேகச்சூடு முதலியவைபோகும் இச்சாபத்தியம்.

கொட்டைப்பாக்கெண்ணெ.

கொட்டைப்பாக்கு ள சீவி இரண்டுபடி ஜலம்விட்டு கால்படியாகக்காய்ச்சி இறுத்துக்கொண்டு விளக்கெண்ணெபடி அரை, வல்லாரைச்சாறுபடி அரை, கூடவிட்டு எரித்து பதத்தில்வடித்து பிள்ளைகள் பெரியவர்களுக்கு தக்கதுகொடுக்க கணச்சூடுதணிந்து சொரி சிரங்கு முதலியவைநீங்கும், பத்தியம் புளி, புலால்நீக்கவும்.

சீத இரத்தக்கழிச்சலுக்கு எண்ணெ.

விளக்கெண்ணெ படி க ல் கத்தாழஞ்சாறு, காணிச்சாறுவகைக்குபடி அறை கலந்து வெங்காயம் பலம் உய அறிந்துபோட்டு சீரகம்

பலம் உ தூள்செய்து ஷை எண்ணெயிலொன்றுபடுத்தி காச்சி வெ
காயம் சிவந்தபதத்திலிறக்கி பெரியவர்களுக்கும், சிறுவர்களுக்கு
உச்சிக்கரண்டி வீதம் எ நாளுட்கொள்ள சீதக்கழிச்சல், இரத்தக்கழி
சல், ஊஷ்ணக்கழிச்சல், மூலக்கழிச்சல் முதலியவைபோகும், இச்ச
பத்தியம்.

நிம்பழஎண்ணெ.

சித்தாமணக்கெண்ணெ புதுவைபடி இரண்டரை கத்தாழஞ்சாறு
தேசிச்சாறு, வெங்காயச்சாறு வகைக்குப்படி அரையே அரைக்கால்
கடுக்காய்த்தோல் பலம் ருவ, சன்னலவங்கப்பட்டை, லவங்கம், ம
ரம், வால்மிளகு, கருஞ்சீரகம், கோஷ்டம், சிறுநாகப்பூ வகைக்கு
பலம் அரை, சோம்புபலம் அரையே அரைக்கால், வெந்தயம் பல
அரையே அரைக்கால், ஜாபத்திரி விரு-க, இவைகளை முன்சாறுவி
டரைத்து எண்ணெயிற்கரைத்து-ரு-நாள் சூரியபுடம்வைத்து பிற
காய்ச்சி மெழுகுபதத்தில்வடித்து கரண்டியளவு எ நாளுண்ண மூல
சூடு, கணச்சூடு, கபாலச்சூடு முதலியவைநீங்கும் இச்சாபத்தியம்.

குழந்தைகளுக்கு மாந்தஎண்ணெ.

விளக்கெண்ணெபடி க ல் இண்டைக்கொழுந்து, வெள்ளறுகு
உசிலம்பட்டை, வெள்ளைப்பூண்டு, மஞ்சள்வகைக்கு எலுமிச்சங்க
யளவரைத்துக்கரைத்து தும்மட்டிக்காய் தோல்விரைத்தள்ளி பா
பில்லைபில்லையாயறிந்துபோட்டு கடுகுபதத்தில்காய்ச்சிவடித்து பிள்ளை
கள்பலத்துக்கேற்ற அளவுகொடுக்க சகலமாந்தங்களும் விட்டகலு
மென்றறிக, பத்தியம் புளி, புலால்நீக்கவும்.

தேங்காய் எண்ணெ.

வெள்ளறுகு சாறுபடி க, புங்கம்பால்படி க; தேங்காய்ப்பால்
படி க, தேங்காயெண்ணெ படி அரை இவைகளை ஒருங்குசேர்த்து
கடுகுரோகணி பலம் க, கம்மாறு வெற்றிலைக்காம்பு பலம் க, சுத்
செய்தவாளம் விரு உ அரைத்து ஷை எண்ணெயிற் கலக்கி கடுகுபத
மாய்க்காய்ச்சிறக்கி நீராகாரத்தில் ஒருதுளிமுதல் பலத்துக்கேற்றதுளி
க்கள்விட்டு சாப்பிட மிகுசுகமாகபேதியாகி வெள்ளை, இரணம், கிரந்
முதலிய மேகநோய்கள்நீங்கும், அன்றிகெற்பந்தரித்தமுதல் ஒன்பது
மாதவரையில் மாதமாதந்தவராமற்கொடுத்தால் போதுகாலத்தில் மிகு
கஷ்டமின்றி பிள்ளையும்பிறந்து அப்பிள்ளைக்கு புண், சிரங்கு, செவா
ப்புமுதலிய ரோகங்களணுகியிருது ஷை எண்ணெ கெற்பஸ்திரீகளுக்
கும் மேகங்கண்டவர்களுக்கும், முக்கியமானவையும், அநுபவமாயுங்
கண்டெழுதியதென்றறிக இச்சாபத்தியம்.

### கணத்தெண்ணெ.

சித்தாமணக்கெண்ணெ படி-க-ல் முசுமுசுக்கை குருவிச்சுபூண்டு, வல்லாரை, நரிபயத்தம், கணப்பூண்டு, கற்றாழைமடல், அகத்தியிலே, வெங்காயம் வகைக்குச்சாறுபடி-வ-சேர்த்து கடுக்காய் பலம் ஒன்ணரையேஅரைக்கால், கருஞ்சீரகம் பலம்-க, துணித்துப்போட்டு வெந்தயம் பலம்-க, சித்தரத்தை பலம்-க, மற்றையமூன்றுமருந்தைஅறைத்துப்போட்டுக்காய்ச்சி மெழுகுபதத்தில்வடித்துக் கரண்டியளவாய்க் கொடுக்கவும், இச்சாபத்தியம்.

### வெள்ளெண்ணெ.

ஏலம் லவங்கம், சுக்குவகைக்கு விரு உ சூரணித்து சித்தாமணக்கெண்ணெ உழக்கில்கலந்து பூரம்-விரு-க, பொடித்துப்போட்டு உச்சிக்கரண்டிவீதம்-எ-நாளுண்ண சூலே, மாந்தம், வாய்வு கைகால் பிடிப்பு, வெள்ளேமுதலியரோகங்கள்நீங்கும், கடும்பத்தியம்-மேற்கூறியசூரணத்தையும், பூரத்தையும் ஷை எண்ணெயைவிட்டு கல்வத்தில் நெகிழவறைத்துவறைத்து கலக்கிக்கொள்ளவும்.

### இரசகற்பூரஎண்ணெ.

ஆமணக்கெண்ணெ வீசை-க, ஏலம் விரு ந, லவங்கம் விரு-க, சுத்தித்தவாளம் விரு-க, இரசகற்பூரம் விரு கஉ இவைகளை செம்பருத்திச்சாறு உழக்காலாட்டி ஷை எண்ணெயிற்கறைத்து நாடோறும் சூரியபுடம்வைத்து சிறுகரண்டியளவு காலையிலுண்டு துத்தியிலேயும் வெந்தயமும் சிவக்கவறுத்துகியாழமிட்டு மாலையிற்கொள்ள மாந்தம், பிடிப்பு மேகவூறல்கள்,கீல்வாய்வுமுதலியவைநீங்கும், கடும்பத்தியம்.

## குழம்பு வகைகள்.



### விரோசனத்துக்கு பவழக்குழப்பு.

ஜாதிலிங்கம், வெண்காரம் வகைக்கு விரு-உ முத்துக்சொட்டைபருப்பு விரு-ச, சுத்திசெய்தவாளம் விரு-அ இவைகளையறைத்துக் குன்றியளவுண்டைசெய்து மாத்திரை ஒன்றையுண்டு குளிர்ந்த ஜலம் உடனே அருந்தபேதியாகும், வெந்நீரருந்தபேதிகட்டும். வாத நோயகளும், இச்சாபத்தியம்.

### பஞ்சசூதக் குழம்பு.

வீரம், இரசகற்பூரம், ஜாதிலிங்கம், இரசச்செந்தூரம், சுத்திசெய்த வாளம்வகைக்கு விரு-க இவைகளை உள்ளித்தயிலத்தாலாட்டி

மிளகளவுண்ண சூதகவாய்வு, உதிரச்சிக்கல்முதலியவைநீங்கும், வறுத்தஉப்பு, சுட்டபுளிகூட்டவும்.

சேத்துமக் குழம்பு.

திரிகடுகு, திரிபலை, தேத்தான்விரை, சீரகம், மதுரம், இந்துப்பு, அசுமோதகம், சின்னிவிரை, முத்தக்காசு, வெட்டிவேர், சிறுவழுதிலைவேர், நன்னாரிவேர், தூதுவளைவேர் வகைக்குகழஞ்சி-க, இவைகளைச் சூரணித்து தேன்விட்டுக்கிளறி கழற்சியளவு இருபோதுண்ண இருமல், சுவாசம், சேத்துமநோயகலும், இச்சாபத்தியம்.

இந்துப்புக்குழம்பு.

இந்துப்பு, காயம் வெண்காரம், சுக்குவகைக்கு பலம்-வ, முருங்கைவேர்ப்பட்டை இடித்துப்பிழிந்த சார்விட்டு நன்றாயரைத்தபின் கொஞ்சம்தேன்விட்டரைத்து களாக்காயளவுஅந்திசந்தியுண்ணவாய்வு சூலை, குன்மவாய்வு, மலவாய்வுமுதலியவைநீங்கும், இச்சாபத்தியம்.

சண்டமாருதக்குழம்பு.

ஜாதிலிங்கம், அரிதாரம், மனோசிலை, இரசகற்பூரம், கருநாபி, வெண்காரம், கெவுரிவகைக்கு விரா-உ, இந்தசரக்குகளை வெவ்வேறு சட்டியில்வைத்து கொட்டைக்கரந்தைசாற்றாலாவது சம்பழச்சாற்றாலாவது சுருக்கிய்ந்து கல்வத்திட்டு சுத்திசெய்தவாளம் விரா-டகூ ஒக்கச்சேர்த்து வால்மிளகு, குராசானிஓமம், கண்டத்திப்பிலி அரத்தை, கடுக்காய், தானிக்காய், கடுகு, சுக்கு, கடுகுரோகணி, கிராம்பு, பெருங்காயம், கஸ்தூரிமஞ்சள் திப்பிலி, திப்பிலிக்கட்டை, ஆனைத்திப்பிலி, ஓமம், சிறுநாகப்பூ, வாய்விளங்கம், கோஷ்டம், ஜாதிக்காய் வகைக்கு விரா-ச சூரணித்து ஷை மருந்தில்கலந்து இந்துப்பு விரா-ச கூடச்சேர்த்து திருகுகள்ளிப்பால், கொடிவேலிக் கியாழம் சமன்கூட்டி ௰உ-ஜாமமாட்டி சிமிழ்தனிலடக்கஞ்செய்யவும்.

அநுபானமும் தீருங்வியாதியும்.

மேற்கூறிய சண்டமாருதக்குழம்பில் மிளகுப்பிரமாணம், அரத்தை சுக்குசூரணத்தில் வைத்துண்ண சுரங்களும், கிராம்பு, திப்பிலி, இஞ்சி, மாவிலிங்கப்பட்டை, காட்டாமணக்கு, வெண்ணொச்சிவேர் இவைகளைஅறைத்து சுரசஞ்செய்து ஷை மருந்தைத்தீட்ட சன்னிபதின்மூன்றும், கடுக்காய்க்கியாழத்தில் இருமலும், தழுதாழை, வெண்ணொச்சிச்சாற்றில் வாதநோய்களும், தூதுபத்திரி, கண்டங்கத்திரி, ஆடாதோடை, சித்தரத்தை, சிறுகாஞ்சோரி, திப்பிலி, கடுக்காய்சமன்கொண்டிடித்து கியாழமிட்டு ஷை மருந்தைவைத்துண்ண

